
இப்போது!
விக்ஸ் வழங்கும்
இயற்கைக் காணிக்கை
விக்ஸ்
ஹெர்பல்
மாத்திரைகள்
Vicks Herbal
இப்போது, விக்ஸிலே மருந்துகளும் மூலிகைகளும் சிறப்புடன் கலக்கப்பட்டுள்ளன. ஆகவே அது தொண்டைக்கு இயற்கையான முறையிலே இதமளித்து, வாய்க்கும் உன்னத சுவை தருகிறது.
தொண்டைக்கு இதம்
சுவைத்திடவும் உன்னதம்
OBM/1656

# இவரைப் பற்றி...

ஆளும் கட்சி மீது நம்பிக்கையில்லாத் தீர்மானம் கொண்டு வருவார்கள், பார்த்திருக்கிறோம். ஆனால் எதிர்க் கட்சித் தலைவர் ஒருவர் மீது நம்பிக்கையில்லாத் தீர்மானம் கொண்டுவரப்பட்டு, நிறைவேற்றப்பட்டதைக் கேள்விப்பட்டிருக்கிறீர்களா? இலங்கை தமிழர் விடுதலை முன்னணியின் தலைவர் திரு அமிர்தலிங்கத்தின் மீதுதான் அவ்வாறு நம்பிக்கையில்லாத் தீர்மானம் கொண்டுவரப்பட்டது.

1947ம் ஆண்டு, தமது 21ம் வயதில் அரசியலில் புகுந்த அமிர்தலிங்கம் அவர்களின் வாழ்க்கையே போராட்டமாக அமைந்து விட்டது. 1947, 1956, 1958, 1971, 1974, 1975, 1981 ஆண்டுகளில் தமிழர்கள் மீதும், தமிழ் மொழியின் மீதும் காட்டப்பட்ட சிங்கள வெறித்தனத்துக்கு எதிராக சாத்வீகமான முறைகளில் போராட்டத்தில் இறங்கி, போலீஸாரின் குண்டாந் தடிகளைச் சந்தித்தவர். 1956ம் வருஷம் பண்டார நாயகா அரசு சிங்களம்தான் இலங்கையின் ஆட்சி மொழி என்று அறிவித்து, தமிழ் மொழியைப் பின்னுக்குத் தள்ளிய போது பாராளு மன்றத்தின் எதிரில் அமைதியான முறையில் மறியலில் ஈடுபட்ட அமிர்தலிங்கம் காட்டுமிராண்டித்தனமாகச் சிங்கள போலீசாரால் தாக்கப்பட்டார். தலையில் ரத்தம் சொட்டச் சொட்டப் பாராளுமன்றத்தில் நுழைந்து பேசிய நிகழ்ச்சிதான் வாழ்க்கையில் மறக்க முடியாதது என்கிறார் அமிர்தலிங்கம்.

இன்னொரு நிகழ்ச்சி 1971ல் நடந்தது. வேலை வாய்ப்பிலும், கல்வித் துறையிலும் தமிழ் இனத்தைச் சேர்ந்தவர்களுக்கு இழைக்கப்பட்ட அநீதியை எதிர்த்துத் தமிழ் மாணவர்கள் போராட்டத்தில் ஈடுபட்டனர். (அப்போது ஆரம்பமானதுதான் 'புலிகள்' இயக்கம்) ஒரு தமிழ் மாணவர் கூட்டம் போலீஸார் தாக்குதலில் இருந்து தப்புவதற்காக இவரது அலுவலகத்தில் நுழைய,

# அமிர்தலிங்கம்

போலீஸார் இவ! அலுவலகத்தில் நுழைய முற்பட அமிர்தலிங்கம் வாசலில் நின்று கொண்டு தாம் அணிந்திருந்த சட்டையைக் கழற்றி போலீசாரின் துப்பாக்கிக்கு நேராக மார்பைக் காட்டி ''என்னைச் சுட்டுவிட்டுப் பிறகு உள்ளே போங்கள்'' என்றவுடன் போலீஸார் திகைத்து விட்டனர்.

இவரது மனைவி மங்கையர்க்கரசியும் சில முறை இவருடன் போராட்டத்தில் இறங்கிச் சிறை சென்றதுண்டு. 57 வயது ஆகும் அமிர்தலிங்கம் யாழ்ப்பாணத்தின் அருகில் உள்ள பிண்ணாக்கம் என்ற கிராமத்தில் பிறந்தவர். இவரது கிராமத்தில் இருந்து கல்லூரி சென்ற முதல் நபரும் இவர்தான். 1977ம் ஆண்டுவரை இலங்கையின் பிரபல கிரிமினல் வழக்கறிஞராகப் பணியாற்றியவர். வட்டுக்கோட்டை என்ற தொகுதியிலிருந்து நான்கு முறை இலங்கைப் பாராளுமன்றத்துக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

அமிர்தலிங்கம் விரும்பிப் படிப்பது அரசியல் சம்பந்தப்பட்ட நாவல்கள் (சென்னையில் 'சோ' நாடகம் ஒன்றையும் பார்த்தார்.) சரியான வேளையில் சாப்பிடாததால் வயிற்றில் தொல்லை ஏற்பட்டு, அதனால் அரிசியைச் சாதமாகச் சாப்பிடுவதில்லை. இடியாப்பம், இட்டிலி விரும்பிச் சாப்பிடுபவை. கூட்டங்களில் பேசும்போது ஐந்து நிமிடத்திற்கு ஒரு முறை 'அன்பர்களே' என்று அழைக்கிறார். இவர் விரும்பிக் கேட்பது அறிஞர் அண்ணா அவர்களின் பேச்சு.

இவருக்குக்காண்டீபன், பகீரதன் என்ற இரு மகன்கள். காண்டீபன் மீது பல பொய் வழக்குகள் இலங்கை அரசு போட்டிருப்பதால் இப்போது அவர் இலண்டனில் இருக்கிறார். காண்டீபன் விரும்பிய பெண்ணை லண்டனுக்குச் சென்று கல்யாணம் செய்து வைத்தார். இரண்டாவது மகனின் காதல் கல்யாணத்தையும் எந்தவித எதிர்ப்பும் இல்லாமல் நடத்தியிருக்கிறார்.

''தனிநாடு கோரிக்கையைக் கைவிட மாட்டேன் என்று கூறியிருக்கிறீர்களே? பேச்சு வார்த்தைகள் மூலம் பிரச்னையைத் தீர்க்க முடியாதா?'' என்று அமிர்தலிங்கம் அவர்களைக் கேட்டபோது தமிழ் மொழிக்கும் இனத்துக்கும் எதிராகச் சிங்கள வெறியர்கள் நிறைவேற்றிய சட்டங்கள், அவிழ்த்து விடப்பட்ட வன்முறைகள் போன்றவற்றை விவரித்துவிட்டுச் சொன்னார்:

''1977ம் ஆண்டுவரை பிரிவினை என்ற வாதத்தை நாங்கள் முன்வைத்தது கிடையாது. சாத்வீகமான முறைகளில்தான் எங்கள் போராட்டத்தை நடத்திக் கொண்டிருந்தோம். ஆனால் இனிப் பேசிப் பயனில்லை என்பதால் 1977ல் தனி நாடு கோரிக்கையை முன்வைத்துத் தேர்தலில் வெற்றி பெற்றோம். ஆகவேதான் அந்தக் கோரிக்கையைக் கைவிட முடியாத நிலையில் இருக்கிறோம். 1977ம் ஆண்டு முதல் ஜெயவர்த்தனேயுடன் பலமுறை பேச்சு வார்த்தை நடத்தி ஆகிவிட்டது. ஆனால் பலன்தான் இல்லை.''

சந்திப்பு: நமது நிருபர்

படம்: சுபா



ஆகஸ்ட் மாதம் பதினோராம் தேதி. கேரளத்தில் கல்லியூரைச் சேர்ந்த சோமசேகரன் நாயர் — சோமன் — வழக்கம் போல் தன் நண்பர்களுடன் 'காக்கா மூலை'யில் இருக்கும் நாயர் கடையில் 'சாயா' குடிக்கச் சென்றான். நாயர் கடை வெறிச்சோடிப்போய் நாயர்சோகமே உருவாக உட்கார்ந்திருந்தார்.

காரணம்?

'பஸ் ஏறி இறந்துபோன ஒரு நாயின் சில பகுதிகளை, காகங்கள் நாயர் கடைக்குப் பக்கத்தில் இருக்கிற கிணற்றில் போடவே, அந்தக் கிணற்றுத் தண்ணீரைப் பயன்படுத்தும் தன்னுடைய கடைக்கு இரண்டு நாட்களாக யாரும் வருவதில்லை' என்று நாயர் சோமனிடம் கூறி வருத்தப்பட்டார்.

சுற்று வட்டார வீடுகளுக்கும் அந்தக் கிணற்றுத் தண்ணீரைத்தான் பயன்படுத்த வேண்டும். ஊராட்சி மன்றத்தின் வழியாகக் கிணற்றுத் தண்ணீரை இறைத்து மாற்றிக் கிணற்றைச் சுத்தம் செய்ய வேண்டுமென்றால் மதிப்பீடு தயாரித்தல், ஒப்பந்ததாரர் நியமித்தல் என்று நாட்கள் பல ஆகலாம். கொஞ்சம் சமூக சிந்தனை கொண்ட சோமன் எந்த விதப் பிரதி பலனையும் எதிர்பாராமல் தன்னுடைய நண்பர்களுடன் கிணற்றைச் சுத்தப்படுத்துவதற்கு வலிய முன்வந்தான்.

அந்தக் கிணறு தரை மட்டத்திலிருந்து நாற்பத்தி ஐந்து அடி ஆழம் இருந்தது. அதில் பத்து, பதினைந்து அடிக்கு மேல் தண்ணீர் தேங்கி நின்றது. சோமன் தன் ஐந்து நண்பர்களுடன் தண்ணீரை இறைத்து மாற்றுவதில் தீவிரமாக ஈடுபட்டான். தண்ணீரின் நிலை இரண்டடிக்கு வந்தபோது சோமனின் நண்பர்கள், கிணற்றை விட்டு வெளியே வந்தார்கள். சோமன் வாளியில் தண்ணீரை நிரப்பி மேலே அனுப்பினான். அப்போதுதான் அந்த எதிர்பாராத நிகழ்ச்சி நடைபெற்றது. கிணற்றின் சுற்றுப்புறக் கருங்கல் சுவர் திடீரென்று இடிந்து கிணற்றினுள் விழுந்தது. அதைத் தொடர்ந்து மண் சரிந்தது. கண்ணிமைக்கும் நேரத்தில் கிணற்றின் அடித்தளத்திலிருந்து பதினைந்து அடி உயரத்துக்குக் கற்களும் மண்ணுமாக நிரம்பி பூமாதேவி சோமனை விழுங்கிய காட்சியைக் கண்டு, மேலே நின்ற அவனது நண்பர்களும் ஊர் மக்களும் குய்யோ முறையோ என்று அலறினார்கள்!

சோமனின் மரணச் செய்தி கேட்டு ஓடி வந்த அவனது குடும்பத்தினர் அலறிய காட்சி நெஞ்சை உருக்குவதாக இருந்தது. இருபத்தி ஐந்து வயது நிரம்பிய சோமனுக்குத் திருமணம் ஆகியிருக்கவில்லை. கட்டைப் பிரம்மச்சாரி.

பொதுநலக் கருத்துடன் சேவையில் ஈடுபட்ட சோமனுடைய மரணச் செய்தியை மலையாளப் பத்திரிகைகள் கட்டம் கட்டி வெளியிட்டன.

சோமன் சமாதியான அந்தக் கிணற்றை சோமனின் நினைவுச் சின்னமாகக் கருத வேண்டும் என்று அவனது நண்பர்களும்,



ஊர் மக்களும் முடிவு செய்தனர். பல்வேறு அரசியல் கட்சியைச் சேர்ந்தவர்கள் கலந்து கொள்ளும் அனுதாபக் கூட்டம் ஒன்றிற்கும் ஏற்பாடு ஆயிற்று. கூட்டம் ஆகஸ்ட் 12-ல் நடைபெறுவதாக இருந்தது.

சோமனுடைய உறவினர்கள் 'எப்படியும் சோமனுடைய சடலத்தைவெளியே எடுத்துத் தந்தேயாக வேண்டும்' என்று வற்புறுத்தினார்கள். ஏற்கெனவே சுற்றுச்சுவர் இடிந்த கிணறு. கிணற்றின் அடி மட்டத்தில் இருந்து பதினைந்து அடி உயரத்துக்குக் கற்களும் மணலுமாகத் தேங்கிக் கிடக்கிறது. அதை மாற்றுகின்ற முயற்சியில் ஈடுபடுகின்ற நேரத்தில் இன்னமும் விபத்து நேரலாமல்லவா? இருந்தும் உறவினர்களின் வற்புறுத்தல் காரணமாக சோமனின் சடலத்தை மீட்பதில் ஊர் மக்களும் அரசு அலுவலர்களும் முனைந்து ஈடுபட்டனர்.

சடலம் வெளியே எடுக்கப்பட்டதும் சடலத்தை அடக்கம் செய்வதற்காக, மாவட்ட ஆட்சித் தலைவரின் அனுமதியின் பேரில், தாசில்தார் ஐநூறு ரூபாயுடன் சம்பவ இடத்துக்கு விரைந்து வந்தார்.

டன் கணக்கில் விழுந்து கிடந்த கற்களையும் மணலையும் மாற்றுவது இமாலயப் பிரச்சினையாக இருந்தது. இருந்தும், கற்களையும் மணலையும் மாற்றும் முயற்சி தொடர்ந்து நடைபெற்றுக் கொண்டேயிருந்தது.

சோமன் ஆகஸ்டு பதினோராம் தேதி பிற்பகல் மூன்று மணிக்குப் பதினைந்து அடி மண்ணுக்கு அடியில் 'சமாதி' அடைந்திருந்தான். அவனுடைய சடலத்தை மீட்கும் வேலை அன்றிரவே ஆரம்பமாயிற்று. ஆகஸ்டு பன்னிரண்டு மதியம் பன்னிரண்டு மணிக்கு மீட்பு வேலையில் ஈடுபட்டிருந்த ஐசக் என்பவனுக்கு ''என்னெ ரெட்சிக்கணே!'' என்று யாரோ குரல் எழுப்புவது போலிருந்

# "நான் செத்தும் பொழைச்சவன்டா!"

தது எல்லோருடைய காதுகளிலும் அந்தக் குரல் கேட்கத்தான் செய்தது. ''என்னெ ரெட்சிக்கணே!''

அது– சோமனின் குரல்தான்!

செய்தி காட்டுத் தீ போல் சுற்றுப்புறக் கிராமங்களுக்கும் பரவியது. கூட்டத்தைக் கட்டுப்படுத்துவது போலீசாருக்கு மிகச் சிரமமாக இருந்தது.

தீயணைக்கும் படையினர் விரைந்து வந்தனர். சிலர் சாந்திவிளை அரசு மருத்துவ மனைக்கு ஓடிச் சென்று டாக்டர் குருப்பை அழைத்து வந்தனர்.

இன்னமும் ஐந்தாறு அடி மணல் மாற்றப் பட வேண்டும். டாக்டர் குருப் மணல் வழியாக ஒரு குழாயை நுழைத்து அதன் வழியாக 'எலக்ட்ரால்' கரைத்த நீரைச் செலுத்தினார்.

இடிபாடுகள் அகற்றப்பட்ட பிறகு ஒரு சிறிய குகையில் கிடப்பது போல சோமனுடைய தலை முதலில் தெரிந்தது. அவன் விழிகள் அங்குமிங்கும் அசைந்தன.

பிரசவத்தின் போது, குழந்தையினுடைய தலை தெரிந்ததும், கேரள மக்கள் மகிழ்ச்சியுடன் 'சிரசு கண்டு' என்பார்கள்! சோமனுக்கும் 'சிரசு கண்டு'!

மீட்கப்பட்ட சோமனுக்கு அப்படியொன்றும் பெரிய காயங்கள் இல்லை. தோள் பட்டைகளில் சில சிராய்ப்பு காயங்களும் காலிலே ஒரு சிதைவும் தான்!

மருத்துவமனைக்கு அழைத்துச் செல்லப் பட்ட அவன், நண்பர்கள் தன்னைத் தூக்கிச் செல்ல முயன்றபோது நடந்தே வருவேன் என்று பிடிவாதம் பிடித்தான்.

பத்திரிகை நிருபர்களிடம் அவன் சொன்னான்: ''கற்களும் மண்ணுமாக என் மீது விழுந்த நேரத்தில் நான் பிழைப்பேன் என்று நினைக்கவேயில்லை! தோள்பட்டைகளினால் மேலிருந்து வந்த கற்களை உந்தித் தள்ளினேன். நான் கீழே விழுந்த போது என்னை நோக்கி ஒரு பெரிய கல் மேலிருந்து விழுந்த காட்சிதான் என் நினைவில் நிற்கிறது! நான் மயக்கமடைந்தேன். அதற்குப் பிறகு, நினைவு வந்தபோது, கற்களாலும் மணலாலும் மூடப்பட்ட ஒரு சின்னஞ்சிறிய குகைக்குள் கிடப்பது போல உணர்ந்தேன். பல மணி நேரங்களுக்குப் பிறகு, மணலைத் தோண்டி மாற்றும் அசைவு எனக்குத் தெரிந்தது. 'பிழைத்துக் கொள்வோம்' என்ற நம்பிக்கை எனக்கு வந்தது. அந்த அசைவு சில நேரங்களில் இல்லாதிருக்கின்ற போது, நான் மீண்டும் சோர்ந்து போவேன். 'என்னெ ரெட்சிக்கணே' என்று பலமுறை உரத்த குரலில் சப்தமிட்டேன். வாய் கிழியக் கத்தினேன். மண்ணைப் பிளந்தபடி வந்த குழாய் வழியாக ஏதோ பானம் செலுத்தப்பட்டதும், மேலே இருப்பவர்களுக்கு என்னுடைய குரல் கேட்டு விட்டது என்ற நம்பிக்கை எனக்கு வந்தது!''

கேரளத்துப் பத்திரிகைகளெல்லாம் 'செத்துப் பிழைத்த' சோமனுடைய கதையை முன் பக்கத்தில் புகைப்படங்களுடன் பத்திபத்தியாக எழுதியிருக்கின்றன.

—இரணியல் ரவி

# நசுங்கிய நத்தை

கா. வில்லவன்







(தன் கவிதை அச்சுக் குதிரை ஏறவேண்டு மென எதிர்பார்த்து ஏமாற்றத்தால் எரிந்து போன ஓர் இளங்கவி உள்ளத்தின் மௌன வெடிப்புக்கள்)

நீர்க்குடம் சுமக்கும்

நத்தையின் இலட்சிய
நீள்வழிப் பயணம் தொடர்கிறது — அது
நிலத்தை உழுதே செல்கிறது!

ஆர்த்திடும் நெஞ்சோ

ஆயிர மாயிரம்
அழகிய கவிக்குடம் சுமக்கிறது — அதில்
அனுதினம் கவிரசம் சுரக்கிறது!

இதயம் பிழிந்தே

இறக்கிய சாற்றை
இன்சுவைக் கவிக்குடம் ஊற்றிவைத்தேன்—
அதை
இலக்கிய மேடையில் ஏற்றிவைத்தேன்!

சதையும் குருதியும்

தழையப் பெய்த
சங்கக் கவிதை தாங்கிவந்தேன்—அதற்குத்
தனியே ஓரிடம் வாங்க வந்தேன்!

அச்சுக் குதிரையில்

அவனியைச் சுற்ற
ஆவல் கொண்டதென் கவிக்குழந்தை
—அந்த
ஆவலோ கவிகளின் பெரும் விந்தை!

உச்சி வெயிலில்

ஓடிடும் மாடாய்
ஓடியதே பல இதழ்களுக்கே — அங்கே
உதைபட்ட கதையோ பெரும் வழக்கே!

சப்பை சவலை

சண்டிப் பிள்ளைகள்
தாங்கியே குதிரை சென்றதடா — என்
குழந்தையை ஒதுக்கித் திரிந்ததடா!

ஒப்புமை இல்லா

ஒண்கவிக் குழந்தை
உகுத்துக் கண்ணீர் நின்றதடா! — என்
உள்ளம் நொறுங்கி உடைந்ததடா!

நத்தையின் கால்களை

நசுக்கிப் போட்டால்
நீள்வழிப் பயணம் தொடர்ந்திடுமோ-அது
நிலத்தை உழவும் இயன்றிடுமோ?

நத்தையின் கால்களை

ஒடித்துப் போட்டால்
ஓரடி வைக்கவும் முயன்றிடுமோ? — அதன்
உறுதுயர் இயம்பவும் முடிந்திடுமோ?





○ சாக்கடை நேழ்களுக்கு சிமெண்ட் லிப்ஸ்டிக்!

# சிரிக்க முடியாத ஊர்

இறைவன் பழமலைநாதரையும், இறைவி விருத்தாம்பிகையையும் 'பாட மாட்டேன்' என்று செருக்கோடு சென்ற சுந்தரமூர்த்தி நாயனாரையும் மடக்கி ஆட்கொண்ட பெருமை விருத்தாசலத்துக்கு உண்டு.

இந்நாள் முதல்வரை முன்னாள் முதல்வர் தன் கட்சியிலிருந்து வெளியேற்றியபோது, அரசியல் தீர்க்கதரிசியாய் எம். ஜி. ஆரை அன்றே முதன் முதலில் ஆதரித்துப் போராட்டம் நடத்தி, போலீஸ் துப்பாக்கிகள் குண்டுகளைப் பிரசவிக்க, தன்னையே மகப்பேறு அறையாய் மாற்றி அரசியல் வானில் தனக்கு ஓர் இடத்தைப் பெற்றுக் கொண்டதும் இந்த ஊர் தான்.

இந்த நகர மக்களுக்கும் தாமஸ் ஆல்வா எடிசனுக்கும் முன் ஜன்மத்தில் கொடுக்கல் வாங்கலில் ஏதோ தகராறு இருந்திருக்கும் போல் தோன்றுகிறது. இல்லாவிடில் சென்னை அண்ணா சாலையில் துணிக் கடை கண்ணாடிப் பெட்டிகளில் பிளாஸ்டர் ஆஃப் பாரீஸ் நங்கைகள் பிலிப்ஸ் வெளிச்சத்தில் நாணிக் கோணி நிற்கும்போது விருதை நகர வயல் வரப்புகளில் எப்போது கரண்ட் வரும்; எப்போது எல்லாத் துண்டுகளுக்கும் தண்ணீர் பாய்ச்சுவது என்று விவசாயிகள் யோசித்துக் கொண்டு கவலைப்பட்டு, கவலைப்பட்டு, தாடி வளர்ப்பானேன்? மின்சாரத் தட்டுப்பாட்டைப் பரவலாக்கு, மின்சார விநியோகத்தில் கிராமங்களைப் புறக்கணிக்காதே என்று உள்ளூர் வழக்குரைஞர் ஒருவர் வழக்குப் போட, வணிகர்கள் சங்கம் கடையடைப்புச் செய்ய; விவசாயிகள் சங்க உறுப்பினர்கள் அதிகாரிகளை முற்றுகையிட, உள்ளூர் அரசியல் கட்சிகள் தங்கள் பங்குக்குக் காலிப் பானைகளை உடைக்க....., மகாத்மா காண்பித்த எல்லா வழி முறைகளையும் பிரயோகித்தும் தமிழக மின்சார வாரியம் இன்னும் அசைந்த பாடில்லை.

இப்பொழுதும் மின்சாரம் பஞ்சாயத்துத் தேர்தல் போல் எப்போது வரும் என்றும் தெரியாது. மத்திய மந்திரி போல் எப்பொழுது வெளியேற்றப்படும் என்றும் தெரியாது! மின்சார வாரியம் நெய்வேலிக்குப் பாக்கி தரவேண்டியுள்ளதா? எண்ணூர், தூத்துக்குடி அதீரணக் கோளாறால் அவதிப்படுகின்றதா? அவ்வளவுதான். எங்கள் ஊர் மின் விளக்குகள் பர்தாப் போட்டுவிடும். மின்சார வாரியம், குறிப்பிட்ட நேரங்களில் மின்சாரம் இருக்காது என முன்கூட்டியே அறிவிப்பதில்லை. அதனால் பெட்ரோல் பங்கு முதல் அரவை ஆலை வரை பல்வேறு மட்டங்களில் ஏற்படும் இன்னல்கள் கொஞ்ச நஞ்சமல்ல. தோசைக்கு மாவு அரைக்கப்போன தம்பியைக் காணோம், பாஸ் போர்ட் சைஸ் போட்டோ எடுக்க ஸ்டுடியோவுக்குப் போன நண்பர் அந்தர்தியானம், பெட்ரோல் போடப் போன அண்ணன் அட்ரஸே காணோம்! வங்கிகள், அஞ்சல் அலுவலகங்கள், நீதிமன்றம், எல்லாம் வேர்வை உற்பத்தி செய்யும் தொழிற்சாலைகளாய் மாறாமல் என்ன செய்யும்?

சரி, அது போகட்டும். விருத்தாசலத்தில் திருவாளர் மின்சாரத்தின் தர்ம பத்தினி யார் தெரியுமா? திருமதி குடி தண்ணீர் தான். அத்தான் மின்சாரம் அருகில் இல்லாவிட்டால் பத்தினி குடி தண்ணீர் நீர்த்தொட்டியில் பூக்க மாட்டாள். மௌன விரதம் அனுசரித்து ''நீர்த்தொட்டி மலை'' ஏறமாட்டாள். பின்தான் நகரத் தாய்க்குலத்தின் குட பூஜை ஆரம்பமாகும். ஈர உடைகளில், தோளிலும், இடுப்பிலும், குடங்களை இடுக்கிக் கொண்டு, காலடிப் பிரதட்சிணம் செய்வார்கள். இதனால நகர மக்களின் குடும்ப வாழ்வில் மாமியார்-மருமகள் சண்டை, பிக்கல், பிடுங்கல் ஒன்றும் இடையாது. நேரம் இல்லாத கார

ணத்தால் அவைகள் எல்லாம் ஒத்திவைப்புத் தீர்மானத்தின் மூலம் ஒத்தி வைக்கப்பட்டுள்ளன. திருவாளர் மின்சாரம் திருமதி குடிதண்ணீரைக் கை விட்டுவிட்டுப்போகும் போதெல்லாம் இடைக்கால நிவாரணமாக அவனுக்கு ஒரு டீசல் ஜெனரேட்டர் கணவனைத்தான் கட்டி வையுங்களேன் எனப் பலமுறை வேதம் ஓதியும், நகராட்சி நீண்ட நிஷ்டையில் உள்ளது.

சத்யஜித் ரே காண்பிக்கும் ஏழை இந்தியவின் முகத்தில் உள்ள மேடு பள்ளங்களை நினைவுபடுத்தும் நகரத் தெருக்கள். முதலில் குடிதண்ணீர் வாரியம் குழி வெட்டிக் கொண்டே போகும். பின்னாலேயே முனிசிபல் காண்டிராக்டர் சரளைக் கல் போட்டுச் செம் மண் தூவிவிட்டுப் போவார். சிமிண்ட் பைப் போட்டுக் கொண்டே முன்னால் போனவர்களை மோப்பம் பிடிப்பார் மற்றொருவர். அவர் பின்னால் தார் ரோடு போட ஜல்லிக் கற்களோடு லாரிகள் தலைகாட்டும். இவர்களின் 'வேலை'களுக்கு இடையே நகரத் தெருக்களில் மலைகள் தோன்றும். மறுநாளே, ஆழமான பள்ளத்தாக்குகள் தென்படும். அடுத்த நாள் பண்டைக் கால அகழிகள் பார்வையில் படும். மற்றொரு நாள் சதுப்பு நிலர் சேரும். இப்படி மனோகர் நாடகக் காட்சி போல் சட்டுச் சட்டென்று மாறும்! நகரத் தெருக்களில் தாவித் தாவி நடந்து பழக்கப்பட்ட நகரவாசிகள் அடுத்தமுறை ஏஷியாட்டில் வலசம்மாவுடன் போட்டி போட்டாலும் ஆச்சரியப் படுவதற்கில்லை.

மழைக் காலங்களில் அந்த விஜயவாடா வாட்டர் ஸ்பெஷலை விருதை நகரத்தில் உள்ள தெற்குத் தெருவுக்குத் திருப்பி விட்டிருக்க வேண்டும். சென்னைக்கு ஒரு வாரத்திற்குத் தண்ணீர் சப்ளை செய்யக் கூடிய அளவுக்குத் தண்ணீர் தேங்கி நிற்கும்—தெருக்களில்! அந்நாட்களில் உள்நகரப் போக்குவரத்துக்கு போட் சர்வீஸ் கூட நகராட்சி நடத்தலாம். நிறைய வருமானம் கிடைக்கும்!

வாழ்க்கைப் பயணத்தில் பல தடங்கல்கள் இருந்துதான் தீரும். அவற்றைப் புத்திசாலித்தனமாக விலக்கி வீறுநடை போட வேண்டும் என்று அறிஞர்கள் சொல்கிறார்கள் என்று நினைத்து, விருதை நகர சன்னதித் தெருவில் நடந்தால் ''பாவம் நீங்கள்'' என பலப்பல தீர்மானங்கள் உங்களுக்காக அனுதாபப்பட்டு நிறைவேற்றப்படும். எங்கும் பழ வண்டிகள், பழ வண்டிகள்! ('இவ்வளவு பழ வண்டிகளா!' என்று மலைப்பீர்கள்!) ஊர்திகளும் போக வழியில்லாமல்; ஊர்ந்து போகவும் வழி இல்லாமல், உடைத்துப் போட்ட அப்பளமாய் சன்னதித் தெரு முழுக்க இவ்வண்டிகள் சிதறி நிற்கும். பழ வண்டிகளுக்கென்று நகராட்சி ஒரு தனி இடம் கொடுத்து ஒதுக்கி வைத்தால் இடரெனச் சாலைகளில் தடுக்கி விழாமல் தேடிப் போய்ச் சறுக்கி விழலாம் அல்லவா?

ஊருக்கெல்லாம் ஜோசியம் சொல்லும் கௌளி தானே கஞ்சிப் பானையில் விழுந்து வெறுமாம் என்பது போல் புதிதாகக் கட்டவும், ஆக்கிரமிப்பை இடிக்கவும் உத்தரவு பிறப்பிக்கும் நகர சார்பு, உரிமையியல் நீதி மன்றங்கள் மூட் புதர்கள் மூலைக்க சொந்த இடத்தை விட்டு விட்டு, வாடகைக் கட்டடத்தில் எட்டு வருடமாய் மூச்சு விட்டுக் கொண்டு இருக்கிறது. அரசுக் கோப்புகள் நடத்திய கண்ணாமூச்சி விளையாட்டில் வென்றது என்னவோ விருத்தாசலம் நீதி மன்ற புதுக் கட்டடங்களுக்கான கோப்புதான். அன்று ஒளிந்து போனவர் நாளது வரை தன் இருப்பிடத்தைத் தெரிவிக்காமல் தலைமறைவாய் இருக்கிறார்!

'இடுக்கண் வருங்கால் நகுக' என்றார் வள்ளுவர். எப்போதாவது இடுக்கண் வந்தால் சற்றுச் சிரமப்பட்டாவது சிரிக்கலாம். ஆனால் இடுக்கண்களுக்கு இடையே அல்லவா ஜீவிக்கிறார்கள் இந்நகரவாசிகள்! அதனால் லாரி, சிரிக்க முடியவில்லை!

— ஜி. பாலச்சந்திரன்

புகைப்படங்கள்: பூபதி ஸ்டுடியோ

○ பனை உண்டு கட்டடத்தைக் காணோம்!



○ வீதிகளில் சாக்கடை வாடை!





பாக் ராணுவ ஆட்சியை எதிர்த்துக் கலவரங்கள்!
இலங்கையில் சுற்றுலாப் பயணிகளைக் கவர தீவிர முயற்சிகள்!
ஆட்சி
யானை என் கட்டுப்பாட்டில் தான் இருக்கிறது!
பாகனை மாத்தியாகணும்!
ரொம்ப அவசரப்படாதீங்க! போகப் போகப் பாத்துக்கலாம்!

கல்கி



1983 செப்டம்பர் 4
ருத்ரோத்காரி ஆவணி 19
மலர் : 42 இதழ் : 5

# குறுவை குளறுபடிகள்!

"மேட்டூரில் 100 அடி தண்ணீர்! வரலாறு காணாத வகையில் 102 அடி தண்ணீர்!" என்று பத்திரிகைகளில் படிக்கும்போதும் டி.வி.யில் அலைமோதும் நீர்த் தேக்கத்தைப் பார்க்கும்போதும் 'ஆகா! விவசாயிகளின் கஷ்டமெல்லாம் தீர்ந்தது' என்று தோன்றும். ஆனால் உண்மை நிலை வேறு என்பதைத் தஞ்சை மாவட்ட விவசாயிகள் சங்கத் தலைவர் எடுத்துக் காட்டியிருக்கிறார்.

தஞ்சை மாவட்டத்தில் நாலரை லட்சம் ஏக்கரில் குறுவையும் தாளடியும் பயிராகிறது. மேலும் எட்டு லட்சம் ஏக்கரில் ஒரே பயிரான சம்பா சாகுபடி நடக்கிறது. குறுவை சாகுபடி ஜூன் மத்தியில் தொடங்கி அக்டோபர் மத்தியில் அறுவடையாகும். 'தீபாவளி நேரத்தில் விவசாயி கரத்தில் பணம் புழங்கும், அவனுக்கு வசதியாக இருக்கும்' என்பது எண்ணம். ஆனால் ஜூன் முதல் வாரத்தில் பருவ மழை தொடங்கியதுமே காவிரியில் தண்ணீர் விடப்படுவதில்லை. கர்நாடக அரசு முன்னெச்சரிக்கையாக அம்மாநில அணைகள் எல்லாம் நிறைந்து தளும்பிய பிறகுதான் தமிழகத்துக்கு நீர் விடுகிறது. இப்போது ஆகஸ்டு மத்தியில் மேட்டூர் அணை நிரம்பி நின்றபோதிலும் குறுவை அறுவடை தாமதமாகும். அந்நேரத்தில் வடகிழக்குப் பருவக் காற்றும் பலத்த மழையும் இருக்குமாதலால் வெள்ளத்தில் குறுவைப் பயிர் சாய்ந்து சேற்றில் மூழ்விட்டுப் பாழாகும் சாத்தியக்கூறு உண்டு.

மேலும் இந்த ஆண்டு தென்மேற்குப் பருவக் காற்றும் மழையும் தாமதித்ததால் நாலரை லட்சம் ஏக்கருக்குப்பதில் சுமார் இரண்டு லட்சம் ஏக்கரில்தான் குறுவை சாகுபடியாகும் என்று மதிப்பிடப்படுகிறது. மேட்டூரில் நீர் திறந்து விடப்படு முன்னரே ஃபில்டர் பாயிண்ட் மூலம் நிலத்தடி நீரைப் பயன்படுத்தி நாற்று நடவுக்கு ஏற்பாடு செய்வது வழக்கம். சென்ற இரு ஆண்டுகளாக நிலவிய வரட்சி காரணமாக இந்த ஆண்டு நிலத்தடி நீரும் போதிய அளவு இல்லை; அதை வெளிக்கொணர பம்ப் செட்டுக்குத் தேவையான மின்சாரத்துக்கும் தட்டுப்பாடு.

விவசாயிக்கு நெல்லுக்கு நல்ல விலை கிடைக்கும் என்ற நம்பிக்கையும் இல்லை. தஞ்சையிலிருந்து வெளி மாவட்டத்துக்குத் தானியத்தைக் கொண்டு செல்ல அரசு தடை விதித்துள்ளது. அரசாங்கத்தின் கொள்முதல் கேந்திரங்களில்தான் கொடுக்க வேண்டும். அரசுத் துறை நிறுவனங்களில் பொதுவாகக் காணப்படும் பல குறைகள் இவற்றிலும் உள்ளன. அரசு கொள்முதல் விலையை உயர்த்தியும் வரட்சி காலப்படியாக ஒரு தொகை அளித்தும் விவசாயிகளின் ஊக்கம் குன்றியே இருக்கிறது. காரணம், தனியார் துறையில் மில் சொந்தக்காரர்களின் போட்டா போட்டி அரசு உத்தரவால் தவிர்க்கப்பட்டு விட்டதுதான்.

உச்ச வரம்புகள் போன்ற சட்டங்கள் அமலாகியும் சிறு விவசாயிகளின் அடிப்படைத் தேவைகள் இன்னும் கவனிக்கப்படாமலே இருக்கின்றன — மினி டிராக்டர்கள், நல்ல சாலைகள், சிமெண்ட் தளத்துடன் களத்து மேடு, போர் அடிக்கவும், நெல் காயவைக்கவும் சிறிய சாதனங்கள் போன்றவை.

அனைத்திலும் முக்கியம்; எப்படியாவது ஜூன் முதல் வாரத்திலேயே குறுவைக்குத் தேவையான நீரைக் கர்நாடக மாநிலத்திடம் போராடிப் பெறுவதுதான். இல்லையேல் அறுவடைக் காலத்தில் மழை, வெள்ளம் காரணமாகப் பயிர் சேதமாவதைத் தடுக்க இயலாது போகலாம்.

---

தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள்
தாயென்று கும்பிடடி பாப்பா -பாரதியார்



● இந்த வாரம் என்ன, உங்க 'வீட்டில' உங்களை எதுவும் தொந்தரவு பண்ணாமல் ரொம்ப சந்தோஷமா வச்சிக்கிட்டாங்க போலயிருக்கு. 21–8–83 இதழில் அட்டகாசமான ஜோக்குகளை யெல்லாம் போட்டு அமர்க்களப்படுத்திவிட்டீரே!

புதுவை தெ. நாராயணமூர்த்தி

● 'அனுமன் போல் செயல்படுவோம்' என்ற தலைப்பைப் பார்த்ததும் . அனுமன் போல் இலங்கையைத் தீயிட்டுக் கொளுத்திவிடச் சொல்லப் போகிறீர்கள் என்று எண்ணிக் கொண்டேன். ஆனால் சஞ்சீவி பர்வதத்துடன் பாய்ந்த அனுமன் போல் செயல்பட வேண்டும் என்று சொல்லி யிருப்பது உங்களுடைய அன்பு இதயத்தையே காட்டுகிறது.

சென்னை-57 இரணியல் 'கலை'

● தொடர்ந்து ஜோக் எழுதுபவர்களின் நகைச்சுவைத் துணுக்குகளைக் கொண்டே ஒரு வாசகர் போட்டியை அமைத்து இருந்தது புதுமையாக இருந்தது. அந்தப் போட்டியின் முடிவு அறிவிக்கப்படும் வாரத்தில் அந்த ஜோக்குகளை எழுதியவர்களின் புகைப்படங்களைப் போட்டு அறிமுகப்படுத்தினால் மேலும் சிறப்பாக இருக்கும்! செய்வீர்களா?

சென்னை-35 சி. பூபால் சிங்

● 'தராசு பதில்கள்' பகுதியில், நெடுமாறனின் தியாகப் பயணம் 'பப்ளிசிட்டிக்காகவே' என்பதை ஆமோதித்திருக்கிறீர்கள். குமரி அனந்தன் தியாகப் பயண இறுதியில் போய்ப் படகில் தொற்றிக் கொண்டதும், தகுந்த காரணமின்றி இரு தலைவர்களும் பயணத்தை முடித்துக் கொண்டு கரையேறி 'தியாகப் பயணம் வெற்றி!' என்று பேட்டியளித்ததும் கேலிக்குரியதாகி விட்டது. கருணாநிதி பாத யாத்திரையைக் கேவலப் படுத்தியதும், இவர்கள் தியாகப் பயணத்தைக் கேவலப் படுத்தியதும் ஒன்றே!

செங்கவல்லி வாசுகி

● மூன்றும் பரிசு பெற்ற ''வெய்யில் இனி என்ன செய்யும்'' சிறுகதையை வாழ்வின் உயர் மட்டத்தில் வாழ்ந்து திடீர் சரிவினால் கீழ் மட்டத்தில் வாழ வேண்டிய நிர்ப்பந்தத்திற்கு ஆளானவர்களுக்கு ஆறுதல் தரும்படி சிறப்பாக எழுதியிருந்தார் ''சஞ்சீவன்''.

மணலூர்வெளிக்கடை ராஜன்

● ராஜேஷ்குமாரின் ''அழகாய் இருப்பது ரொம்பவும் தப்பு'' சிறுகதை இன்றைய சமூகத்தின் அழகிய படப்பிடிப்பு. அழகாய் இருப்பதால் விரும்பப்பட்ட மாயா, அழகிழந்ததும் ஒதுக்கப்படுவதை அழகான கண்ணோட்டத்தில் காட்டியுள்ளார்.

மதுரை-1 எஸ். முத்துபாண்டி

● வாரம் தோறும் இடம்பெறும் ஆனந்தி அவர்களின் 'தெய்வ தரிசனம்' இவ்விதழில் இடம்பெறவில்லையே என்று ஏங்கிய எனக்கு கடைசி அட்டையில் பெரியபாளையத்தம்மனைப் படம் பிடித்துப் போட்டு, கட்டுரையும் வெளியிட்டிருந்தது குறையை நீக்கியது போல் இருந்தது.

நாகப்பட்டினம் ஜே. சிவகுமார்

● மேஜரும் கோமலும் சந்தித்துப் பேசிக் கொண்டே யிருந்தபோது யார் சார் 'கட்' சொன்னது? பேச்சு அரை குறையாக நின்று விட்டது போல் தெரிகிறதே! ஓ! 'இன்று நீ வந்தால் நாளை நான் வருவேன்' என்ற முறையில் பத்திரிகை பாணியில் 'தொடரும்' என்று சொல்லாமல் சொல்லிவிட்டுப் பிரிந்து விட்டார்களோ?

சென்னை-14 ஐயாறு எஸ். வாசுதேவன்

● பாரதப் பண்பாடு, அது உயர்வானது என்றெல்லாம் வாயளவில் போற்றித் திரியும் நாம் செயலளவில் எப்படி நடந்துகொள்கிறோம் என்பதை ''உபகாரத்தில் உயர்நாடு'' என்கிற செய்திக் கட்டுரை வெளிச்சம் போட்டுக் காட்டி, நம் மானத்தை நன்றாகவே வாங்கியிருக்கிறது.

கரூர்-2 கே. என். இராமகிருஷ்ணன்

● 'அச்சா காதர்பாட்சா!' படித்தேன், வியந்தேன். ஒரு தமிழ்க் குடிமகனுக்குத் தமிழ் சரியாகப் பேச, எழுதத் தெரியவில்லை. ஆனால் முஸ்லிம் மாணவன் சம்ஸ்கிருதத்தில் 'புரட்சி' செய்து விட்டான், சிந்திக்கவைத்து விட்டான் மாணவ சமுதாயத்தை!

கும்பகோணம் டி.எஸ். சீதாராமன்

● கல்கியில் பறந்த 'திரும்பி வராத விமானங்கள்' கதையில் 'டெக்னிக்கலாக'ச் சில குறைகள் உள்ளன.

நடக்க முடியாத இது மாதிரி 'ஹெல்மெட் மாருட்டம்' நம் விமானிகள், விமானப் போக்குவரத்து கண்ட்ரோலர்கள், டெக்னீஷியன்களின் தரத்தை உண்மைக்குப் புறம்பாக மிகவும் குறைத்து மதிப்பிடுவதாக இருக்கிறது.

விமானப் படை நிலையம், பூனா —மது கஸ்தூரி

## இந்த வாரம் தொந்தரவு பண்ணவில்லையா?

# ஜெயசக்தி பைனான்சியர்ஸ்

**கவர்ச்சிகரமான வட்டி விகிதங்களில் பிக்சட் டெபாசிட்டுகள் ஏற்றுக் கொள்ளப்படுகின்றன**

| 1-வருடம் | 2-வருடங்கள் | 3-வருடங்கள் | 5-வருடங்கள் |
|---|---|---|---|
| 17% | 18% | 19% | 22% |

நான்கு ஆண்டுகளில் 'சுமங்கலி டெபாசிட் திட்டத்தில்' தங்கள் முதலீடு இரட்டிப்பாகிறது ரூ. 5000/ம் அதற்கு மேலும் டெபாசிட் செய்பவர்களுக்கு ஒரு அழகிய 'வெள்ளி குத்து விளக்கு' அன்பளிப்பாக வழங்கப்படும்

# ஜெயசக்தி சிட்ஸ் & பைனான்ஸ் பி. லிட்.

எமது புதிய குருப்புகள்

| மாதங்கள் | அங்கத்தினர்கள் | சந்தா தொகை | சீட்டு மதிப்பு |
|---|---|---|---|
| 40 | 40 | 250 | 10,000 |
| 40 | 40 | 125 | 5,000 |
| 25 | 25 | 2000 | 50,000 |
| 25 | 25 | 1000 | 25,000 |
| 20 | 20 | 500 | 10,000 |
| 20 | 20 | 250 | 5,000 |
| 20 | 20 | 100 | 2,000 |

ஏல முறை: காப்புத் தொகையுடன் பகிரங்க ஏலம்.
'காப்புத் தொகை' ஏலத்தன்றே திருப்பித்தரப்படும்.

முதலீடு செய்ய, சீட்டுகள் சேர, தொடர்பு கொள்க:

நிர்வாக அலுவலகம்: 39, நடேச ஐயர் தெரு, 2வது மாடி
(சிவா-விஷ்ணு கோயில் அருகில்)
உஸ்மான் ரோடு, தி. நகர், சென்னை-600 017 போன்: 447186

பெங்களூர் : 24/1-A, மார்கோஸா ரோடு (10வது கிராஸ்)
மல்லேஸ்வரம், பெங்களூர்-560 003 போன்: 366971

தஞ்சாவூர் : எண்: 2 & 3, முதல் மாடி, ஜி.ஏ. கனால் ரோடு, தஞ்சாவூர். போன்: 1626

திருவண்ணாமலை : 14/A, ஆனைக்கட்டி தெரு, திருவண்ணாமலை-606 601. போன்: 483

பட்டுக்கோட்டை: 9-A, தலையாரி தெரு, பட்டுக்கோட்டை. போன்: 453

**C.A. BALOO** Managing Director

**ஜெயசக்தி — நம்பிக்கைக்கு பெயர் பெற்றது**

CHARI

## அத்தியாயம் 34

கௌசல்யாவும் அவன் துணையும் பாம்பே கோட்டவுனில் பின்னிப் பின்னித் திளைத்தது ஞாபகம் வந்தது காயத்ரிக்கு. தன் தலையில் தானே பூக்கூடை கவிழ்த்துக் கொள்ளும் சந்தோஷம் தெரிந்தது அதில்.

இங்கே எதிரில் இது வேறு விதம்.

புருஷன் விழி திறந்து அசைந்ததும் மனைவி ஓடிவந்தாள். சிலைமாய்க் கிடக்கிற புருஷன் முகத்தை ஏந்திக் கொண்டாள். இடம் மறந்தாள். வெட்கம் மறந்தாள்.

''ராஜா.... ராஜப்பா... முழிச்சுண்டுடுத்தா... சமயபுரத்தாளே... வயத்துல பாலை வார்த்தியேடி. உன் மண்ணிலே ஈரத் துணியோட உருள்றேன் தாயே....'' எங்கோ யாருக்கோ உறுதி சொன்னாள். வலியிலும் பயத்திலும் மனைவியின் அணைப்பில் நெகிழ்ந்து கண் கலங்குபவனை மார்போடு அணைத்துக் கொண்டாள்.

''ஒன்றுமில்லை. ச்சே... ச்சே... நான் இருக்கறச்சே எதுக்கு என் ராஜா கண் கலங்கணும். எல்லாம் சரியாப் போயிடுத்தே. என்னைப் பத்தே நான் சிங்கம் மாதிரி எழுந்து நடக்காதா. பொறுத்த வேளை. கண் திருஷ்டி. என்னை மாதிரி சந்தோஷப்பட்டவள் உண்டான்னு நானே கர்வப்பட்டதுக்குப் பலன். என் சாமர்த்தியம்தான் இந்தக் குடித்தனம்னு நான் பேசினதுக்கு விழுந்த அடி, ராஜாவைப் படுத்திருக்கு. எங்கப்பா சொல்வா எத்தனை சந்தோஷப்பட்டாலும் இது யாரோ போட்ட பிச்சைன்னு நெனைக்கணும்னு. அது தெரியாத போயிடுத்து. ஒரு ஆட்டம் ஆடி வுட்டுடுத்து. என்ன குடிக்கறேன்? ஹார்லிக்ஸ் கரைச்சுத் தரட்டுமா? ஜூஸ் வேணுமா?''

கவனமாக, அடிபடாத இடம் முழுவதும் தடவித் தடவிப் பௌடரைப் பஞ்சால் பொதியாய் ஒற்றி ஒற்றிக் கண் ஈரத்தில் குளிப்பாட்டி புருஷனைக் குழந்தையாய் மாற்றி என்றால்தான் உனக்கு ஹிம்ஸை என்று அவன் கழிவிரக்கம் பகிர்ந்து மனசின் கனம் கரைத்து... காயத்ரி ஹா என்று பார்த்துக் கொண்டிருந்தான்.

''காதலினால் மானுடர்க்குக் கலவியுண்டாம் கலவியிலே மானுடர்க்குக் கவலை தீரும்.''



# இரும்பு குதிரைகள்

பாலகுமாரன்

நெஞ்சு நனையக் குமறிக் குமறி வருத்தத்தில் இப்படி ஆணும் பெண்ணும் பேசிக் கொள்வதே கவிதைதானோ? என்னவோ ஒன்று இவர்களைப் பிணைத்துத்தான் வைத்திருக்கிறதோ. இந்த ஸ்நேகம் எத்தனை நாள்? ஆயுசு பந்தம் வரையிலா? வலிக்கிற நேரம் மட்டுமா? த்தூ என்று தாரிணி இவனை ஏசமாட்டாளா? சரிதான் போடி எனக்குத் தெரியும் என்று விஸ்வநாதன் சொல்லியிருப்பானோ? சார்ந்திருப்பது என்பது மிக அவசியமானதுதானோ? எதிர் செக்ஸைச் சார்ந்திருப்பது தவிர்க்க முடியாததோ? இந்த அழுகை, வேதனை கூட சந்தோஷம் தானோ...?

'போன வருஷம் கத்திக் குத்துப் பட்டு ஆஸ்பத்திரியில பதினைஞ்சு நாள் இவர் கெடந்தார். அப்ப நான் பட்ட பாடு... பகவானுக்குத்தான் வெளிச்சம்.' இன்னும் கர்வம் பொங்கத் தாரிணி பல வருடங்கள் சொல்லிக் கொள்ள வாய்ப்பா?

மனிதன் கூடி வாழும் இயல்பினன்—

உண்மையா... பிரமையா... சொல்லிக் கொடுக்கப்பட்டதா... மாயையா... மாயை எனத் தெரிந்து மீறத் தெரியாமல் மாயையை அங்கீகரித்துக் கொள்வதா..... உனக்கு நான் [illegible]தவ, எனக்கு நீ [illegible]தவ என்கிற ப[illegible]ண்ட மாற்று?



என்னுள் யாரோடும் ஒட்டாத தன்மை இருக்கிறதே. அதே நேரம் கூடி வாழ வேண்டிய நிர்ப்பந்தம் வருகிறதே. உணவுக்கும் உடைக்கும் வம்சாவளிக்கும் அடுத்தவரை எதிர்நோக்கும் தன்மை. எவ்வளவு பெரிய சிக்கல் இங்கே.... அடுத்தவரை தன் தனிமையோடு அங்கீகரிக்க வேண்டிய நிலை. அடுத்தவரே ஆதரவுக்கும் அழிவுக்கும் காரணமான நிலை. உறவே சுகம். உறவே சுமை.

மனிதன் எதைத் துறக்க வேண்டும்? தனிமையை மறக்கவா... உறவை அறுக்கவா... எது அமிர்தம்? எது நஞ்சு? இரண்டும் கலந்துண்டு இது என்ன வேதனை?

வெளியே நிழலாடிற்று.

நாராயணசுவாமி நின்றிருந்தார். தாரிணி நிழல் பட்டுத் திரும்பினாள். ''வாங்கோ'' என்று அழைத்தாள். ''செத்த அவரைப்பார்த்துக்கோ காயத்ரி. நான் ஏதாவது குடிக்கக் கரைக்கிறேன்.''

விஸ்வநாதன் நாணு சாரை நோக்கிப் புன்முறுவல் செய்தான். காயத்ரியை நோக்கித் தலையசைத்தான்.

''அப்பா... முழிச்சுண்டயா... கலங்கிப் போயிட்டேன்டா குழந்தை...'' நாணு சார் உதடு நடுங்க அவர் அருகில் அமர்ந்தார்.

''தாரிணி, இந்தப் பொண்ணை உனக்குத் தெரியுமா. நாணு சாரோட டாட்டர்.''

''தெரிஞ்சுண்டேன். ரொம்ப உதவி. குழந்தைகளை அவதான் முழுக்கப் பார்த்துண்டா. மாமா நூறு தரம் மருந்துக்கும் ஆரஞ்சுப் பழத்துக்கும் அலைஞ்சார்.''

''மாமா இல்லேன்னா சரக்கு எடுத்திருக்கவே முடியாது தாரிணி.''

''போறுண்டாப்பா. என் ஜன்மத்துக்கும் போறும். உனக்கு நான் உதவின்னு நெனச்சுப் பண்ணிட்டு. நீ இப்படி நாரா கிழிஞ்சு கெடக்கறது போறும்.''

''கெடக்கு நாணு சார். எம். டி. வந்தாரா?''

''வாசல்லே இருக்கார். வரச் சொல்லட்டுமா?''

காயத்ரி ஆபீஸ் ஆட்களை அழைத்து வந்தாள். கூட்டம் கூடிற்று. புகழ் மாலைகள் சூட்டப்பட்டன. வலித்த இடம் விழுப் புண்ணாயிற்று. வார்த்தைகள் பதக்கங்கள் ஆயின.

''லாரி வாடகை கொடுக்க வேண்டும் சார். நாணு சார் இல்லாது இந்த ட்ரான்ஸாக்ஷன் இல்லே. இது அவருடைய மகள். நமக்கு உதவி செய்ததில் பெரும் பங்கு காயத்ரிக்குத்தான். அவர்களிடம் பேசுங்கள்.''

''வடிவேலு அட்ரஸே காணோம். எங்க கொண்டு போய் வாடகை குடுக்கிறது? அதெல்லாம் அப்புறம். மொதல்ல ஒன்னோட ஒடம்பு தேறட்டும்.''

எம்.டி.யும் நாணு சாரும் தனியே பேசினார்கள்.

''தெருவுல ஒரு மாதிரி விஷயம் தெரிஞ்சு போயிடுத்து. இன்னும் தெளிவாத் தெரிஞ்சா என் பொண்ணுக்கு வேலை போயிடும். நானும் அந்தத் தெருவில இருக்க முடியாது.''

''புரிகிறது. இங்கிலீஷ் கம்பெனி உங்களைக்கும் நன்றி மறக்காது. நீங்கள் விஸ்வநாதனைக் கவனித்துக் கொள்ளுங்கள். தொடர்ந்து எங்களுக்கு உதவி செய்யுங்கள். நாங்களும் செய்கிறோம்.''

ஆபீஸ் நகர்ந்து விட்டது. மிச்சப் பேரல்களை எடுக்க வேண்டும். எடுத்த பேரலை உடைத்து ரப்பர் பால் எடுக்க வேண்டும். ஏகப்பட்ட வேலை கம்பெனிக்கு.

பதினேழு நாட்களுக்குப் பின் விஸ்வநாதன் எழுந்து நடக்கத் தொடங்கினான்.

நன்னடத்தையும் சுதந்திர தின விழாவும் சிறைத் தண்டனையைக் குறைத்துக் கொடுக்க செல்லத்தம்பி வெளியே வந்தான்.

காந்திலால், டிரான்ஸ்போர்ட் நஷ்டம் என்பதால் ஆள் குறைப்புச் செய்தான். காயத்ரி வேலை இழந்தாள். வடிவேலு தலைமறைவான மூன்றும் நாளே கூலியாட்கள் வேலைக்குத் திரும்பிவிட்டார்கள்.

எப்போது காந்தி ஸ்நேகம் இல்லையென்றாகிவிட்டதோ அவன் குடிசையும் ஸ்நேகம் இல்லைதான். வயசுப் பெண்ணை வைத்துக் கொண்டு பட்டணத்தில் எங்கே போவது?

''எங்காத்துக்கு வாங்கோ.'' தாரிணி நாணு சாரையும் காயத்ரியையும் வரவேற்றாள்.

''வரமாட்டேன்னு சொல்லிடுவேளோன்னு பயந்தேன் சார். நீங்க வந்தது எவ்வளவு சந்தோஷமா இருக்கு தெரியுமா?'' விஸ்வநாதன் தந்தையையும் மகளையும் வரவேற்றான்.

''நான் மட்டும் இருந்திருந்தா வந்திருக்க மாட்டேன் விஸ்வநாதா. நான் பாஷாண்டி. காயத்ரிக்கு ஒரு எடம் வேணுமே.''

''ரொம்ப சூடிகையான பொண் சார். தேடலும் கோபமுமா இருக்கிற பொண்.''

''அதான் என் கவலை. சிரிச்சு வெட்கப்பட்டு தலையைக் குனிஞ்சு நிக்கறதா இருந்தா சரி பொழைச்சுப் போன்னு விட்டுடலாம். தெரிஞ்சாகணும்னு பறக்கறது. அதான் பட்டணத்துக்குக் கூடவே கூட்டிண்டு வந்தேன். அவளுக்குச் சொல்லிக் குடு விஸ்வநாதா.''

''எனக்கே ஒண்ணும் தெரியாது சார்.''

''இல்ல விஸ்வநாதா. ஒனக்கு உலகம் தெரிஞ்சிருக்கு. கவிதை எழுதறவன். வார்த்தையிலேயே காணாமல் போறவனில்ல நீ.

---

''ஆபரேஷன் செய்த டாக்டரே மயக்கமாகி விழுந்திட்டாரா? ஏன்?''

''தான் செய்த ஆபரேஷன் சக்ஸஸ் என்கிற அதிர்ச்சியை அவராலே தாங்கிக்க முடியலே!''

—கீழை அ. கதிர்வேல்



# தலைவலி பலவகை உண்டு



# சிகிச்சை ஒன்றே ஒன்று!

# அனாஸின்

## இதில் அதிக அளவில் வலி-நிவாரணி அடங்கியுள்ளது

துரித நிவாரணம் அளிக்க, உலகெங்கும் டாக்டர்கள் மிக அதிகமாக சிபாரிசு செய்யும், வலி-நிவாரணி மருந்து அதிக அளவில் கொண்டது—அனாஸின்.
தலைவலி, ஜலதோஷம், ஃப்ளூ, முதுகு வலி, தசை வலி, பல் வலி ஆகியவற்றிற்கு நல்ல பலனளிக்கிறது.

அனாஸின் மீது மட்டுமே நம்பிக்கை வையுங்கள்.

இப்போது பாதுகாப்பான ஃபாயில் உறையில்.




இந்தியாவின் புகழ்பெற்ற வலி-நிவாரணி மருந்து

GM-2-83 TM

* Licensed user of T.M. : Geoffrey Manners & Co. Ltd.

எடுத்த காரியம் முடிக்கணும்னு கவலைப் படறவன் எல்லோரும் கவிஞன்தான். அடுத்தவா மனசு நோகுமான்னு யோசிக்கிறவன்தான் கவிஞன். மனசு ஒன்றி முனைப் போட செய்யற காரியம் எல்லாம் ஒசத்திதான். யோகம்தான். வயத்துப் பாட்டுக்கு ஏதாவது தொழில் பண்ணிண்டே மனசும் வளர்த்துக்கிற வித்தை சொல்லிக்குடு.''

''எனக்கே அப்படி ஆசை இல்லையே நாணு சார். சினிமா எடுக்கணும்னு ஆசை நெஞ்சு நெறைய உண்டு. நல்ல படம் பார்த்துட்டு வரச்சேயெல்லாம் புத்தி பேயாய்ப் பறக்கும். உத்தியோகத்தை விட்டுரலாமான்னு தோணும்.''

''நடிப்புக்குப் போக வேண்டாம்.''

''நடிக்கிற ஆசை இல்ல சார். டைரக்ட் பண்ணணும்.''

''ரெண்டும் ஒண்ணுதான். சூத்ரதாரியும் நடிச்சுக் காட்டணுமே.''

''ஏன், நடிக்கிறதுல என்ன தப்பு?''

''நடிப்பு அவஸ்தை. நடிகனாவது பாபம்.''

''புரியலே சார். கூத்து ஒரு கலை இல்லையோ?''

''ரொம்ப ஆபத்தான கலை அது. அசந்தா ஆளை விழுங்கிடும். நடிக்க நடிக்க சுயம் மறந்து போயிடும். தான் எது, நடிப்பு எதுன்னு தனக்கே தெரியாது போகும்.''

''நாம அப்பப்ப வாழ்க்கையில நடிக்கிற இல்லையா?''

''அந்த அவஸ்தையே பிள முடியலே. அதையே தொழிலா வச்சுக்கறது எவ்வளோ கஷ்டம்.''

''நீங்க பேசறது புதுசா இருக்கு.''

''உனக்குக் கவிதை வர்றது விஸ்வநாதன். எண்ணத்தை, மனசை வாக்கியமாக மாற்றுவது கவிதை. எண்ணம் உயர உயர மனசு விசாலமாக வார்த்தையும் வரும். கைதட்டலுக்குக் கவிதை பண்ணணும் இருந்தாப் போறும்.''

''கவிதை இப்ப யாருக்கும் புரியலையே. சினிமா, நாடகம் நெருக்கமானது மாதிரி கவிதை புரியலையே.''

''ஒரு தத்துவத்தைக் கலையா மாத்தறபோது ஏற்படற தீர்த்த வடிவம் நாடகம். தத்துவத்துக்கு நெருங்கின வடிவம் கவிதை.''

''நீங்க சொல்றது சரியாப் படல சார்.''

''வாஸ்தவம். வெளிய சொன்னா இன்னிக்கு சண்டைக்கு வருவா. என் அபிப்பிராயம் இது. மேற்கொண்டு நீ யோசனை பண்ணிப் பாரு. ஒரு விஷயத்தைக் கவிதை எழுதறபோது உண்டான அமைதி நடிக்கிறபோது வருமா யோசனை பண்ணு. உன் இயல்பு எதுவோ அதையே கவிதை செய்யறதும் உன் இயல்பே மறந்துபோய் வேறு இயல்புகளில் இருப்பதும் வெவ்வேறானது. புரியலையா?''

''அப்பாவும் பொண்ணும் ஒரு அச்சா இருக்கீங்க சார்.''

''அதாம்பா கவலை. நான் பட்ட மன வேதனை இதுக்கும் வருமோன்னு கவலை. பொண் குழந்தையா வேற இருக்கே.''

''வந்து ஒண்ணுமே பேசலையே.''

''வேலை போயிடுத்துன்னு வருத்தம்.''

''எங்க எம். டி.க்குப் போன் பண்ணிச் சொல்றேன் சார்.''

''ஒனக்குப் பெரிய சுமையா இருக்கோம்.''

''அதெல்லாம் ஒண்ணும் இல்லே. வாஸ்தவமா சந்தோஷமா இருக்கு சார்.''

ஒரு வாரத்தில் காயத்ரிக்கு இங்கிலீஷ் கம்பெனியில் ட்ரெயினி க்ளார்க் வேலை கிடைத்தது.

காயத்ரி இரவில் தாரிணிக்கு உதவி செய்தாள். குழந்தைகளைக் கொஞ்சித் தூங்க வைத்தாள். நாணு ஐயர் ஒட்டடை அடித்தார். காய்கறி வாங்கி வந்தார். மின் கட்டணம் கட்டினார். தோட்டத்துச் செடிகளுக்குத் தண்ணீர் ஊற்றினார். பழவந்தாங்கலில் எண்பது ரூபாய்க்கு வீடு கிடைக்குமா என்று அலைந்தார்.

''எனக்கு உடம்பு முடியலே மாமா. ரொம்பக் குமட்டறது. தலை சுத்தல் ஜாஸ்தி இருக்கு. நீங்க வேற வீடு பாக்க வேண்டாமே. குழந்தை பொறக்கற வரை நீங்களும் காயத்ரியும் என்கூட இருங்களேன்.'' தாரிணி மூச்சிரைக்கக் கேட்டபோது திரும்பிக் காயத்ரியைப் பார்த்தார்.

காயத்ரி, ''நீயே முடிவு பண்ணுப்பா'' என்றபோது வேதனைப்பட்டார். 'இந்தப் பெண்ணுக்குள் ஏதோ பெரிய மாற்றம் நடந்து கொண்டிருக்கிறது' என்று தீர்மானம் செய்தார்.

(தொடரும்)



# சீக்கிரம்! உங்கள் குழந்தையுடைய காயத்தின் சிறந்த பாதுகாப்பிற்கு, உபயோகிப்பீர் பாண்ட்-எய்ட் பிராண்டு டிரஸ்ஸிங்குகள்.

**அவனது திறந்த காயத்தில் சிறிது அழுக்கு இருந்தாலும் கூட தொற்றுப் பரவக் கூடும்.**



தொற்றுக்கு எதிராக, திறந்த காயங்களின் பாதுகாப்பிற்கு உலகெங்கிலும் உள்ள தாய்மார்கள் நம்புவது பாண்ட்-எய்ட் டிரஸ்ஸிங்குகள்.

பாண்ட்-எய்ட் டிரஸ்ஸிங்கில் உள்ள கிருபணமான ஆன்டி செப்டிக், காயத்தை ஆற்றுவதற்கு உதவுகிறது. அதிலே, காற்றோட்டமளித்து விரைக் தாற்றும் நுண்துளைகள்; ஒட்டிக்கொள்ளாத வசதிமிக்க ஒப்பற்ற அடுக்கு.

காயங்களின் வெவ்வேறு வடிவம் மற்றும் அளவுகளுக்கு ஏற்ப வருகின்றன பாண்ட்-எய்ட் டிரஸ்ஸிங்குகள். பெரிய புண்கள், சிறிய வெட்டுக் காயங்கள், கட்டுப்போட முடியாத இடங்கள், கொப்புளம் மற்றும் சிராய்ப்புகளுக்கு எப்போதும் உங்கள் கைவசமிருக்கட்டும் பாண்ட்-எய்ட் டிரஸ்ஸிங்குகள்.




**பாண்ட்-எய்ட் பிராண்டு டிரஸ்ஸிங்குகள்.**

**தொற்றுக்கு எதிரான மிகவும் நம்பகமான பாதுகாப்பு.**

Johnson & Johnson



OBM/9283

# மாலையில் பூக்கும் மலர்கள்

சிவசங்கரி

## [5]

கறுப்புத் திராட்சைகளை அலம்பி, காம் பில்லாமல் சுத்தம் செய்து, மிக்ஸியில் இட்டு, தம்ளர் தண்ணீரை அதில் விட்டு, கொட்டை அரைபடாமல் இரண்டு தரம் நிறுத்தி, நிட்ட மாக மிக்ஸியை ஓட்டியவள், ஜூஸை வடி



கட்டி, சிட்டிகை உப்பு, இரண்டு ஸ்பூன் சர்க்கரை போட்டு நன்றாகக் கலக்கினான்.

'போச்ட் எக்' செய்வதற்கென சின்னதாக டபரா மாதிரி இருந்த கிண்ணத்தில் துளி வெண்ணெயைத் தடவி, இரண்டு முட்டைகளை உடைத்து ஊற்றி அலுமினிய இலுப்பச் சட்டியில் கொஞ்சம் தண்ணீர் விட்டு, அதில் கிண்ணத்தை வைத்து, தட்டைப் போட்டு மூடி, ஆவியில் இட்லி வேகிற தினுசில் வைத்து விட்டு முட்டை வெந்த நாழிகையில் டோஸ்டரில் ரொட்டித் துண்டங்களை வாட்டி எடுத்தான்.

சரியாக மூன்று நிமிடங்களில் வழுக்கைத் தேங்காய் போல் தள தள வென்று வெந்து முட்டை தயாரானதும், டேபிளில் டோஸ்ட், வெண்ணெய், தேன், ஜூஸ் இத்யாதிகளை எடுத்து வைத்து விட்டுப் படுக்கை அறைக்குள் சென்றான்.

''ப்ரேக்ஃபாஸ்ட் ரெடி...''



''நானும் சாப்பிட ரெடி... ஷூ மாட்டிக்க வேண்டியது தான்.''

இடக்கையினால் அவன் இடுப்பை அணைத்தபடி பாலாஜி டேபிளுக்கு வந்து உட்கார்ந்தான்.

கௌரி முட்டையில் மிளகுத்தூள், உப்புத் தூவி, ரொட்டிகளில் வெண்ணெயைத் தடவினாள்.

''நீ சாப்பிட்டாயா, டார்லிங்?''

''ம்ஹூம் இல்லே... வெறும் ஜூஸ்தான் இன்னிலேந்து....''

''விரதம், கிரதம் ஏதாவதா?''

''அதெல்லாம் ஒண்ணுமில்லே... பத்து நாள்ல ஒண்ணரைக் கிலோ வெயிட் போட்டிருக்கேன். இந்த ரேட்டுலேயே போனா, வாசப்படியை இடிக்கத்தான் கட்டணும்... வாடகை வீடு... வீட்டுக்காரன் சும்மா இருப்பானா? அதான் சமத்தா டயட் பண்ணிடலாம்னு...''

''ப்ஷூ! ஒண்ணரைக் கிலோவா? அப்படி ஒண்ணும் நீ அதிகமா சாப்பிடற மாதிரி எனக்குத் தோணலியே!''

கையும் களவுமாய்ப் பிடிபட்டு விட்ட சின்னக் குழந்தை போல் கௌரி சிரித்தாள்.

''மத்தியான வேளையில வீட்டுல இருக்கறப்ப கன்னா பின்னான்னு நொறுக்குத் தீனி தின்கிறேன் பாலா.. கேக்ஸ், சிப்ஸ் இப்படி ஏதாவது... புஸ்தகம் படிக்கறப்போ ஒரு கையில தீனி வைச்சிக்கிட்டா கதை இன்னும் ஸ்வாரஸ்யமா இருக்கறாப்பல தோணுது.''

பாலாஜி விளையாட்டாய் விஸில் அடித்துக் கண்களை விரித்தான்.

''ஹோ! சாக்லெட் கேக்கும், கப் கேக்கும் மறைஞ்ச விதம் இப்படித்தானா? அக்கா பசங்க வந்தாங்க அவங்களுக்குச் செஞ்சேன், கொடுத்தேன்றதெல்லாம் சாக்கா, கண்ணம்மா?''

''ச்சே...அத்தனையும் நான் தின்னுருந்தா ஒண்ணரைக் கிலோ இல்லே, பத்து கிலோ ஏறியிருப்பேன். ஏதோ, அப்பப்ப கொஞ்சம் கொஞ்சம், தட்ஸ் ஆல்....''

வேலைக்காரி கிட்டத்தில் இல்லை என்பதை ஊர்ஜிதப்படுத்திக் கொண்ட பாலாஜி மனைவியை நெருங்கி, தணிந்த குரலில் கண்ணைச் சிமிட்டிக் கொண்டு பேசினான்.

''ஒண்ணரைக் கிலோவுக்கு நீ இத்தனை சங்கடப்பட வேண்டாம் டார்லிங். வெயிட் போட்டாலும் சரியான இடத்தில தான் போட்டிருக்கே.. உயரமா இருக்கறதுக்கு... ம்ம்...ம்ம்... ம்ம்....'' பாதியில் பேச்சை நிறுத்திக் கைகளால் அந்தரத்தில் எட்டு மாதிரி அபிநயம் பிடித்துக் காட்டிய நிமிஷத்தில் ஆயா சமையல் கட்டிலிருந்து எட்டிப் பார்த்து ''காப்பிக்குப் பால் சுடவைக்கட்டுமாம்மா'' என, தன் நாட்டியத்தை ஆயா பார்த்து விட்டாளே என்ற வெட்கத்துடன் பாலாஜி தலையைக் குனிந்துகொள்ள, கௌரி 'பக்' என்று வாய் விட்டுச் சிரித்தாள்.

''காப்பி கலக்கட்டுமா, பாலா?''

''அரை கப்...''

உள்ளே சென்று, சூடாகக் காப்பி கலந்து எடுத்து வந்து, மீண்டும் அவனருகில் உட்கார்ந்தாள்.

''எப்பப் பேசினாலும் இப்படி தமாஷ் பண்ணிக்கிட்டே இருக்கிறதுல, முக்கியமான சமாசாரங்கள் கூட சொல்ல மறந்துடுது...''

''இப்ப எது மறந்து போச்சு?''

''வர்ற வெள்ளிக் கிழமை சுரேஷுக்குப் பிறந்த நாள். கிஃப்ட் வாங்க வேணுமா?''

''ஐய் மறந்தே போயிட்டேனே! 'பெண்டாட்டி வந்த குஷில என் பிள்ளைங்க பத்தின நினைப்பே உனக்கு இல்லையேடா'னு அக்கா கேலி பண்றது சரியாத்தான் இருக்கு.''

''ஹோய்... ஹோய்... இதுதானே வேணுங்கறது....உங்க மறதிக்கு என் தலையை உருட்டணுமா?''

சிரித்துக்கொண்டே கௌரி வினவ பாலா எட்டி அவள் புறங்கையில் முத்தமிட்டான்.

''ஆயா...வரா...''

கௌரி குரல் கொடுத்ததும், சக்கென்று நிமிர்ந்து உட்கார்ந்த பாலாஜி அவள் விளையாட்டுப் புரிந்ததும், ''நல்லாப் பார்க்கட்டும்'' என்றபடி மீண்டும் கவிழ்ந்து கையில் முத்தமிட்டான்.

''ச்சீ... எச்சில்... தேமல் வரப்போகுது... எனக்கென்ன...''

''வரட்டும் வரட்டும்... உடம்பு பூரா வரட்டும்...''

''என்னாச்சு உங்களுக்கு, காலைல இத்தனை வெறி வர?இனிமே தினமும் ஆயாவை விட்டு உங்களுக்கு டிபன் பரிமாறச் சொல்லப் போறே.:..''

''கூப்பிட்டீங்களாம்மா?''

இப்போது நிஜமாகவே ஆயா வந்துவிட வேகமாய் மனைவியை அணைத்திருந்த பிடியை விட்டு விட்டு நிமிர்ந்த பாலாஜி எக்கச் சக்கத்துக்கு அசடு வழிந்தான்.

''காலை வேளைல ஆயா ஏன் வேலைக்கு வரணும்? ஒரு பத்து மணிக்கு வரக்கூடாதா? அப்படி என்ன தலை போற காரியம் இங்கே?''

மொணமொணவென்றுபேசியபடி டிபனைச் சாப்பிட்டு எழுந்தவன் பின்னோடு கௌரியும் வந்தாள்.

''நீங்க தவனை வியாபாரத்திலே சம்பாதிக்க வச்சுப் படம் எடுத்திருக்கலாம். அதுக்காக வாரத்துக்கு ஒரு சீனா தான் படத்தை ரிலீஸ் பண்ணுவேன்னு சொன்னா எப்படி?''

—அலமேலு அய்யர்



''ஆயாவைப் பத்தி அப்புறமாப் பேசிக்கலாம். முதல்ல சுரேஷுக்கு என்ன வாங்கறதுன்னு சொல்லுங்க...''

''சாயங்காலம் நான் வந்ததும் மவுண்ட் ரோடுல ஒரு சுத்துச் சுத்தலாமா?''

''களைச்சுப் போய் வருவீங்க.... வீணு அலைச்சல் எதுக்கு? மத்தியானம் அப்பாவைப் பாக்கப் போலாம்னு இருக்கேன். அப்படியே ஸ்பென்சருக்குப் போய் சுரேஷ் ஆசைப்பட்ட கார் வாங்கிடட்டுமா?''

''மூணு வயசுப் பிள்ளையால கார் ஓட்ட முடியுமா? பெடல் பண்ணக் கால் எட்டுமா?''

''பெடல் பண்ண முடியாட்டி இப்போதைக்கு உட்கார வைச்சுத் தள்ளினாப் போச்சு.... ரொம்பஆசைப்படறான் பாலா.''

''ரைட்டோ மேடம்... உன் இஷ்டம். டாக்ஸி எடுத்துக்கிட்டுப் போ... ஆட்டோல போகாதே...''

''போன வாரம் அப்பா வீட்டுக்குப் போனப்பவே டாக்ஸில வரணுமா; இங்க காரும் டிரைவரும் சும்மாஇருக்கறப்போன்னு அப்பா வருத்தப்பட்டார். அதனால போன் பண்ணிக் காரை வரவழைச்சுடறேன்,என்ன பாலா?''—

''இதுக்கெல்லாம் கூட என்னைக் கேட்கணுமா டார்லிங்?...''

படுக்கை அறைக்குச் சென்று கலைந்துவிட்ட தலைமுடியை ஒருதரம் வாரி;ப்ரீஃப் கேஸுடன் புறப்பட்ட பாலாஜி நின்றான்.

''கௌரி.....''

''என்ன பாலா... நாழி ஆகலியா?''

''கைனகாலஜிஸ்ட் கிட்ட எப்பப் போறது? மூணு மாசம் கழிச்சு வாங்க, சில டெஸ்ட் எடுக்கணும்னு சொன்னார்.மேலே ஒரு மாசம் கூட ஆயாச்சு....''

''......''

''நானே சாயங்காலத்துக்கு அபாய்ண்ட்மெண்ட் வாங்கட்டுமா?என்ன கோளாறுன்னு தெரிஞ்சுக்கிறது நல்லது இல்லையா?''

''நல்லதுதான்...ஆனா, நாளைக்குவேணும். சுரேஷ் பிறந்தநாளைக்காக கேக் பண்ணணும். வேலை இருக்கு. அடுத்த வாரம் போகலாம்... ப்ராமிஸ்.''

அன்றைக்கு அவனிடம் கூறியபடி பிற்பகல் இரண்டு மணிக்கு மேல் அப்பாவை வண்டி அனுப்பச் சொல்லி, பிறந்த வீட்டுக்குப் போய் ஒரு மணி நேரம் போல அங்கு இருந்துவிட்டுக் காரிலேயே ஸ்பென்சருக்குச் சென்று குழந்தைகள் ஓட்டும் மோட்டார் வண்டியைச் சிகப்பு நிறத்தில் வாங்கியவள், நாலு குழந்தைகள் இருக்கும் இடத்தில் ஒன்றுக்குக் கொடுத்துவிட்டு, மற்றவைகளை விட்டுவிடுவது தவறு என்று சுரேஷின் இதர சகோதர சகோதரிகளுக்கும் ஆளுக்கொரு பரிசைத் தேர்ந்தெடுத்தாள்.

பாலாஜிக்கு உறவு என்று சொல்லிக் கொள்ள, இந்த அக்கா சுந்தரி ஒருத்திதான் உயிருடன் இருக்கிறாள்.

பாலாஜியின் குடும்பம் அந்தஸ்தில் ரொம்ப சாதாரணமானது.

ஊளர்க் வேலை பார்த்து வந்த அப்பா அகாலமாய் மரணம் அடைந்துவிட, பெண் சுந்தரியையும், பிள்ளை பாலாஜியையும் தனி

யாக நின்று வளர்த்தது தாய் கனகம்தான். சுந்தரி பாலாஜியை விட இரண்டு வயசு மூத்தவள்.

எஸ். எஸ். எல். சி. படித்த பின், இனியும் பெண்ணை வீட்டில் வைத்திருப்பது தவறு என்று மூன்று நான்கு வருடங்கள் தேடு தேடென்று தேடி, சொத்து என்று சொல்லிக் கொள்ள இருந்த வீட்டையும் விற்று, தங்கள் ஸ்திதிக்கு மேற்பட்ட இடத்தில் மாப்பிள்ளை பார்த்துச் சுந்தரியின் திருமணத்தைக் கனகம் முடித்தபோது பாலாஜி மருத்துவப் படிப்பு முதல் வருடத்தில் இருந்தான்.

''வீடு போனா என்ன தம்பி. உங்கக்கா சந்தோஷமா, வசதியா இருக்கா... அதானே முக்கியம். பெண்ணைப் பத்தி இனி எனக்குக் கவலை இல்லே... நீயும் நல்லபடியா படிப்பை முடிச்சு, டாக்டராகித் தலை எடுத்திட்டேன்னா அப்புறம் எனக்கு என்ன குறை?'' என்று பேசி, இல்லாமையைப் பெரிசு பண்ணாமல், நிறைவுடன் நாட்களைக் கடத்தி வந்த கனகம் பாலாஜி எம். எஸ். படித்துக் கொண்டிருந்த போது ஓயாமல் தலைவலி, தலைவலி என்று முனகத் தொடங்கினாள்.

சாதாரணச் சிகிச்சைக்கெல்லாம் அது மசியாது போக, நியூரோ சர்ஜனிடம் அழைத்துச்சென்றதும் டெஸ்டுகளைப்பண்ணிப் பார்த்துவிட்டு, அவர் பெரிசாய் இதயத்தில் ஓங்கிக் குத்தினார்.

ப்ரெய்ன் ட்யூமர்...

அப்புறம் எண்ணி மூன்றே மாசங்கள்...

ஆபரேஷன் செய்யத் தேதியைக் குறிக்கக் கூட அவகாசம் தராமல் கனகத்தின் உடல் நிலை தடதடவென்று சரிந்தது.

கை, கால் அசைவு போயிற்று.

பேசுவது நின்றது.

தானாகச் சாப்பிடுவது, ஆளை இனம் கண்டு கொள்வது மறைந்தது.

கடைசியில்....

கோமா...

பத்து நாட்களுக்கு அப்படி....

அம்மாவை இழந்த பிறகு அக்கா, அவள் குழந்தைகளிடம் பாலாஜி வைத்திருக்கும் பாசம் இன்னும் அதிகமாயிற்று என்றுதான் சொல்ல வேண்டும்.

சுந்தரிக்கு இப்போது நாலு குழந்தைகள். மூத்தவள் சீதா... அடுத்து கோபி; மூன்றாவது சுதா... கடைக்குட்டி சுரேஷ்...

**ஸ்**பென்சரிலேயே மறுநாள் செய்யவேண்டிய கேக்குக்குத் தேவையான உலர்ந்த பழங்கள், முட்டை, வெண்ணெய் இதர சாமான்களையும் வாங்கிக் கொண்டு வீடு திரும்பி, வண்டியை அனுப்பிவிட்டு, பாலாஜி வர நாழியாகும் என்பதால்,வெள்ளைஅட்டை வண்ணக்கலவை,ப்ரஷ்ஷை எடுத்து வைத்துக் கொண்டு உட்கார்ந்தாள்.

அட்டையைச் சுத்தமாக வெட்டிஎடுத்துத் தாங்கள் வாங்கியிருப்பது போலவே ஒரு வண்டியைச் சின்னப் பையன் ஒருவன் அதீத சந்தோஷத்துடன் ஓட்டுவது போல் தீட்டி... எங்கள் சுரேஷுக்குப் பிறந்த நாள் வாழ்த்துக்கள் என்று எழுதி, வாழ்த்தட்டையைத் தயார் செய்தாள்.



'' 'செக்' பின்னால எதுக்கு உன் அட்ரஸ் எழுதறே?''

''எப்படியும் திரும்பி வரப் போற 'செக்' ஆச்சே! அட்ரசுக்குச் சிரமப்பட வேண்டாம்னுதான்!'' —சிவலட்சுமி

மறுநாள் பூராவும் ஃப்ரூட் கேக் பண்ணவும், அதை ஆறவைத்து மேலே ஐஸிங் அலங்காரம் செய்து, 'மெனி ஹாப்பி ரிடர்ன்ஸ் டியர் சுரேஷ்' என்று எழுதவுமே பொழுது சரியாக இருந்தது.

வெள்ளிக் கிழமை காலையில் பாலாஜி க்ளினிக் கிளம்பின கையோடு, கௌரியும் புறப்பட்டு நாத்தனார் வீட்டுக்குச் சென்றாள்.

கிரேப் பேப்பர்களை நீளநீளமாய் வெட்டிக் குறுக்கும் நெடுக்கும் சீதா, கோபியின் உதவியுடன் கட்டி, வண்ண பலூன்களை ஊதி, கொத்துக் கொத்தாய் அங்கும் இங்கும் தொங்க விட்டு, வரப்போகும் குழந்தைகளுக்குத் தரவேண்டிய பதார்த்தங்கள் அத்தனையும் தயாரா என்று பார்த்து, திரும்பும் குழந்தைகள் கையில் கொடுக்கப் போகும் ஊதல், முகமூடி, சாக்லெட் வகையறாக்களைத் தனித் தனிப் பையில் போட்டு — என்று கௌரி திட்டமிட்டுச் செய்த ஏற்பாடுகளைப் பார்த்து, சுந்தரியும், அவள் புருஷனும் மற்றவர்களும் ஏகத்துக்குப் பாராட்ட, பிறந்த நாள் கொண்டாட்டங்கள் முடிந்து வீடு திரும்புகையில் பாலாஜி எக்கச் சக்கக் குஷியில் இருந்தான்.

நிமிஷத்துக்கொரு தரம் ''ஐ லவ் யூ கௌரி கண்ணு'' என்றான்.

''உன்னை நெனைச்சு நான் ரொம்பப் பெருமைப்படறேன்'' என்றான்.

மனைவி களைத்திருப்பது புரிய வீட்டுக்கு வந்ததும் தொண தொணவென்று பேசிக் கொண்டிருக்காமல், முதலில் அவளை உடை மாற்றிக் கொள்ளச் செய்து, படுக்க வைத்து அவளுக்குப் பிடித்தமான மாலி புல்லாங்குழல் இசைக் கச்சேரியை டேப்பில் சன்னமாக ஒலிக்கச் செய்து, விடி விளக்கை மட்டும் ஏற்றி, கட்டத்தில் அமர்ந்து தலையைக் கோதி, ஒரு குழந்தையைத் தூங்கச் செய்வதைப்போல இதமாக நடத்துகொள்ள,

தங்களுக்குச் சீக்கிரமே ஒரு பிள்ளை பிறப்பது போலவும், அவனுடைய பிறந்த நாளை மிகப் பிரமாதமாகக் கொண்டாடுவது போலவும் கனவு கண்டபடி கௌரியும் சீக்கிரமே உறங்கிப் போனாள். (தொடரும்)


"ஏதோவொரு டிவியைத்
தவணைமுறையில் விற்றேன்
கூடவே தவணையில்
தலைவலியையும் வாங்கினேன்!"

நினைவு கூறுகிறார், எக்மோரிலிருக்கும் "இன்ஸ்டால்மெண்ட் கிங்" திரு. தீரேந்திர ஷா, ஷா அண்டு சன்ஸின் அதிபர், "ஒரு கஸ்டமர் கண்டிப்பானவராக இருந்தாலும் அவர் கஸ்டமர்தானே? ஒரு தடவை ஒருவருக்கு ஏதோ ஒரு டிவியைத் தவறுமுறையில் விற்றேன்.

விற்கும்போது நான் எந்த தலைவலியையும் எதிர்பார்க்கவில்லை. அதுபோல் ஆறுமாத காலத்திற்குள்ளேயே அவர் 16 புகார்களை கொண்டு வருவார் என்றும் எதிர்பார்க்கவில்லை.

அத்துடன் அது நின்றதா என்ன? ஒருநாள் அவர் அந்த டிவியை எடுத்து வந்து அதற்கு பதிலாக அவருடைய பணத்தையோ அல்லது மற்றொரு நல்ல டிவியையோ கொடுத்து தான் ஆகவேண்டும் என்று சண்டையிட்டார். அவ்வளவுதான். அதற்குப்பிறகு நான் யாருக்குமே எந்த டிவியையும் சிபாரிசு செய்வதில்லை. இருந்தாலும் வற்புறுத்தும் கஸ்டமருக்கு மட்டும் நான் ஒரு சாலிடரை மட்டுமே சிபாரிசு செய்கிறேன். ஏனென்றால் அடிக்கடி தொல்லை தராத டிவி சாலிடெர் மட்டுமே!"

அனுபவம் பேசுகிறது, ஆதாரபூர்வமாக! இவையெல்லாம் சாலிடெரின் சிறந்த செயல் திறனுக்கான அத்தாட்சி. அடிக்கடி தொல்லைத் தராத ஒரே டிவி சாலிடெர் என்பது உறுதியான உண்மை.

மேலும் சாலிடெரின் பழுதுபார்க்கும் சர்விஸ் என்ஜினியர்கள் எப்பொழுதும், எங்கிலும் உங்களுக்காகவே சேவை செய்யக் காத்திருக்கின்றனர். அதற்கும் மேலாக சாலிடெரின் ஆராய்ச்சி மற்றும் மேம்பாட்டுத் துறையினர் (R & D) நீங்கள் எதிர்பார்க்கும் வகையில், சிறந்ததை மேலும் சிறப்புற்றதாக்கும் பணியில் ஈடுபட்டுள்ளனர். எப்பொழுதும் உங்களுக்காகவே!

இத்தகைய பாரம்பரியத்தில் உருவானதே புதிய **TS62E** — சாலிடெரின் திறனுக்கும் தரத்திற்கும் மற்றுமோர் எடுத்துக்காட்டு.

- 14 வாட் சக்தி வாய்ந்த ஆம்ப்ளிஃபையர்.
- 20 செ.மீ. ஃபெரக்ஸ்டியூர் டியூயல் கோன்ஸ்பீக்கர்.
- ரெக்கார்ட் பிளேயர், டேப் ரெக்கார்டர் போன்றவற்றை இணைக்க 'பிக்அப்' அமைப்பு.
- தேவையில்லா ஒலியை நீக்க ஆட்டோமேடிக் சாதனம்.
- விஷன் இன்டர்மீடியட் ஃப்ரீக்குவன்ஸியில் (V.I F) கண்டுள்ள முன்னேற்றத்தினால் ஈடு இணையற்ற படத் தோற்றம்.
- இரண்டு ஷட்டர்கள் கொண்ட லாமினேடட் காபினெட்.
- மழைக் காலங்களில் உங்கள் டிவியைப் பாதுகாக்க கையாளப்பட்டுள்ள நவீன முறை.

**மேலும் விவரமறிய இன்றே உங்களருகாமையிலுள்ள சாலிடெர் டீலரை அணுகுங்கள்.**

**ரூ. 325 மிச்சம்**
உள்ளடங்கிய வோல்டேஜ் ஸ்டெபிலைசர்



# சாலிடெர்

**—தொல்லையில்லாத் தொலைக்காட்சி**

HE 762B

## போட்டிக் கதை -1

# சொந்தங்கள்

**—ரேவதி பாலு—**

**அ**லமாரியில் புத்தகங்களுக்கிடையே ஒரு 'ப்ளாஸ்டிக்' உறையில் போட்டு ஜாக்கிரதை யாக வைக்கப் பட்டிருந்த அந்த அப்ளிகேஷன் ஃபார்ம்களை மீண்டும் ஒருமுறை எடுத்துப் பார்த்துவிட்டுத் திரும்பவும் பத்திரமாக அதன் இடத்திலேயே வைத்தான் அருணா.

ஆயிற்று! இன்னும் ஒரு வாரத்தில் ப்ளஸ்டு தேர்வு முடிவுகள் அறிவித்து விடுவார்கள். அப்புறம் மதிப்பெண்களைப் பொறுத்து எந்தக் கல்லூரியில் எந்தப் பட்ட வகுப்பு என்று தீர்மானம் செய்ய வேண்டும்.

அப்பா மட்டும் இருந்திருந்தால்...

திடீரென்று சென்ற மாதம் மாரடைப்பில் இறந்துபோன தந்தையின் நினைவு அவளைச் சூழ்ந்து கொள்ள, மூண்டெழுந்த துக்கத்தில் கண்ணோரத்தில் நீர் தேங்க ஆரம்பித்தது.

இப்படி அற்பாயுசில் போகப் போகிறோம் என்று தெரியாத அப்பா அவளுக்காக அலைந்து திரிந்து நாலைந்து கல்லூரிகளிலிருந்து அப்ளிகேஷன் ஃபார்ம் வாங்கி வைத்திருந்தார்.

எந்த இழப்பினாலும் எந்த ஓர் இயக்கமும் நிரந்தரமாக ஸ்தம்பித்துப் போய் விடுவதில்லை என்பதற்கு உதாரணம் போல் அருணாவின் அண்ணனுக்கு அவனுடைய அப்பா வேலை செய்த கம்பெனியிலேயே ஒரு வேலை போட்டுக் கொடுத்தார்கள்.

காமாட்சியம்மாள் தன் மகனுக்குப் பட்டம் சூட்டாத குறையாக அந்த வீட்டுத் தலைவன் பதவியைக் கொடுத்து, அந்தப் பதவிக்குரிய சோதனைகளைச் செய்ய ஆரம்பித்தாள்.

அருணா ஆவலோடு எதிர் பார்த்த ப்ளஸ்டு ரிசல்ட்டும் வந்தது. நிறைய மதிப் பெண்கள் பெற்ற மகிழ்ச்சியில் கல்லூரியில் சேருவதைப் பற்றி வீட்டில் உற்சாகமாகப் பிரஸ்தாபித்தபோது—

''பொட்டப் புள்ளைக்கு எதுக்கு இதுக்கு மேலே படிப்பு? இதுக்குக் கீழே வேற ஒண்ணு இருக்குது. அது இப்பத்தான் ஏழாங் கிளாசில இருக்கு. அதை வேற ஒரு பத்து கிளாஸ்வரைக்கும் படிக்க வச்சு ஒப்பேத்தணும். இத் தினி நாளுஇஸ்கோலுக்குப் போறேன்னு வெளிய சுத்திட்டு வந்தது போதும். இனிமே பேசாம வீட்டோட கிடக்கட்டும். வேலைக் காரியை நிறுத்திடறேன். வீட்டு வேலைகளைக் கவனிச்சுக்கட்டும். பொட்டப் புள்ளைக்கு அதுதானே முக்கியம்? நீ இன்னாப்பா சொல்றே?'' என்று மகனை வினவினாள் தாயார்.

எஸ். எஸ். எல். சி.யில் இரண்டு முறை தோற்றுவிட்டு உருப்படியாக ஒரு வேலையைத் தேடிக் கொள்கிற எண்ணம் கிஞ்சித்தேனும் இன்றி ஊர் மேய்ந்து கொண்டு, அப்பாவின் சம்பாத்தியத்தில் தண்டச் சோறு தின்று கொண்டிருந்த மோகன், அப்பாவின் மறைவுக்குப் பிறகு வீட்டில் தனக்குத் திடீரென ஏற்பட்ட 'அந்தஸ்தினால்' ஒரு மிதப்புடன் வளைய வந்து கொண்டிருந்தான்.

''ரெண்டு பொட்டப் புள்ளைங்களைக் கட்டி வெக்கற பொறுப்பைத் தலைமேல கட்டிட்டு அப்பா போயிட்டாரேன்னு நானே கவலையில இருக்கேன். இந்தப் பாட்டுல இதுக்கு மேல்படிப்பு வேற கேக்குதா?'' என்று தாயாரின் கூற்றை ஆமோதித்தான்.

''அண்ணனுக்கு வேலைக்குப் போகணுமே, நேரமாச்சே! போயி சட்டுப் புட்டுனு வெந்நீர் வெளாவி வை! அப்படியே அவனோட பேண்ட், ஷர்ட்டு ஏதாச்சும் தோய்க்கணுமான்னு கேட்டு வாங்கி வச்சுக்க. வேலையெல்லாம் முடிஞ்சு மத்தியானத்துக்கு மேல அதையெல்லாம் துப்புரவா தோய்ச்சுப் போடு! உம்... சீக்கிரம்! காலங் கார்த்தால மசமசன்னு நிக்காதே!''

ஒரே தாயின் வயிற்றில் பிறந்தும் அவன் ஆணாகவும் தான் பெண்ணாகவும் பிறந்த காரணத்தால் தங்களிடையேதான் எவ்வளவு வேற்றுமைகள், நடைமுறையில்! இதே நான் குளிக்கப் போனால் அண்ணன் வெந்நீர் விளாவித் தருவானா, இல்லை அம்மா தான் அண்ணனை அப்படி ஒரு காரியம் செய்ய விடுவாங்களா?

'ஐயோ! இந்தப் பொட்டைக்கு இன்னா கர்வம்! ஆம்புளப் புள்ளையைக் கூப்பிட்டுத் தண்ணி வெளாவி வைக்கச் சொல்லுதே! பெரியவன், பெருந்தலைன்னு ஒரு மரியாதை வாணாம்?' என்று அங்கலாய்த்து அண்ணனைப் பெரியவனுக்கி அவளுக்கு எட்டாத உயரத்தில்



அம்மா வைக்க முடிவதை அவளால் கற்பனை செய்து பார்க்க முடிந்தது.

**''மோ**கன்! மோகன் இல்லியாம்மா?'' அப்பாவின் நண்பர் ஏகாம்பரம்தான் குரல் கொடுத்தார்.

'என்ன விஷயமாக அண்ணனைத் தேடுகிறார்' என்று யோசித்தவாறே அருணா பின் பக்கத்திலிருந்து வருவதற்குள், குரல் கேட்டுச் சமையலறையிலிருந்து வெளியே வந்த காமாட்சியம்மாள் அவரை வரவேற்று உட்கார வைத்தாள்.

மோகன் டிபனை முடித்துவிட்டு வந்து, ஏகாம்பரத்தைப் பார்த்ததும் பரபரப்பாக,



''இருங்க சார்! இதோ வந்திடறேன்'' என்று கைகழுவப் போனான்.

''நம்ம கம்பெனியில 'பாக்கிங் செக்ஷன்லே' ஆள் எடுக்கறாங்களாமே, உனக்குத் தெரியாதா?'' என்றார் ஏகாம்பரம்.

மோகன் ஒன்றும் புரியாமல் விழிப்பதைக் கண்டதும் ஏகாம்பரம் தொடர்ந்து பேசினார்;

''நாளைக்கு உன் தங்கச்சியை இட்டுக்கினு வந்துடுப்பா! நான் சொல்ல வேண்டிய இடத்தில் சொல்லி வெக்கறேன். நிச்சயம் கெடச்சிடும். வூட்ல சும்மா உக்காந்துக்கினு கெடக்கிறதுக்கு மாசம் இருநூறு ரூபாய் கெடச்சா உதவியா இருக்குமே? இன்னா? அப்ப நாளைக்கு வந்து சொல்றியா?''

ஏகாம்பரம் விடைபெற்றுச் சென்றதும் தாயை ஆர்வமாய் அணுகினான் மோகன்.

''நாளையிலிருந்து இதை வேலைக்கு அனுப்பிச்சுடலாம்மா. இருநூறு ரூபா கெடைக்குமே கண்ணயா! என்ன சொல்றீங்க?''

''நா இன்னாணுப்பா சொல்லப் போறேன்? வீட்ல சும்மாத்தானே குந்திக்கினு கெடக்குது. நாளைக்கே இட்டுக்கினு போப்பா!''

நெருக்கமான அந்த இரண்டு அறைக் குடித்தனத்தில் முன்னறையில் பலமாக மூச்சு விட்டாலே உள்ளறையில் தெளிவாகக் கேட்கும். தங்கைக்குத் தலை பின்னியவாறே ஹாலில் நடந்த சம்பாஷணைகளைக் காதில் வாங்கிக்கொண்டிருந்தஅருணாவுக்குப்பொங்கி வந்த கோபத்தில் தாயையும் அண்ணனையும் பார்த்து ஓவென்று கத்த வேண்டும் போல ஆவேசம் வந்தது.

# பல்லவன் கடிக்கிறன்



[பல்லவனில் பயணம் செய்யும்போது நெரிசலில் இடிபடுவது சாதாரணம். இப்போது கொஞ்சம் 'கடி' படுங்களேன்!]

- ஒருவர்: ஏன் சார்! நீங்க கே.கே. நகர் தானே போகணும்: உங்க பஸ் அதோ வருது.

  மற்றவர்: அது என் பஸ் இல்லீங்க. பல்லவன் பஸ்!

- பயணி: வடபழனி நாலு குடுங்க.

  கண்டக்டர்: இருக்கிறதே ஒரே வட பழனிதாங்க. அதுவும் குடுக்கறதில் லீங்க.

- ''ஏங்க, வாணி மகால் வந்துடுச்சா?''

  ''வாணி மகால் வராதுங்க. நாமதான் வாணி மகால் போகணும்.''

- பயணி: இந்த பஸ் எல். ஐ. ஸி. போகுமா?

  கண்டக்டர்: போகும்.

  பயணி: அப்ப பத்தாவது மாடிக்கு ரெண்டு டிக்கட் குடுங்க.

- ''ஜெமினி பாலம் தாண்டியாச்சா?''

  ''ஜெமினி பாலம் ரொம்பப் பெரிசுங்க. அதை யெல்லாம் தாண்ட முடியாது. ஏறித்தான் வரணும்.''

- ''நீங்க தி. நகர்தானே போகணும்? எதிர்ப்பக்கம் போய் இதே பஸ் புடிச்சுப் போங்க.''

  ''அதெப்படிங்க எதிர்ப் பக்கம் போய் இதே பஸ்ஸைப் புடிக்க முடியும்?''

—எஸ். சந்திரமௌலி

'ஏதோ அப்பா செத்துப் போனாரு. அவ ரோட கம்பெனியில பிச்சை போடற மாதிரி உனக்கு ஒரு வேலை போட்டுக் கொடுத் தாங்க. இல்லேன்னா உன் படிப்புக்கும் தகுதிக் கும் இன்னிய தேதியில நீ தெருத் தெருவா சுத்திக்கிட்டிருப்ப. இந்த அழகில எந்த உரிமையில என்னுடைய செயல்களை நீ தீர்மானிக்க ஆரம்பிச்சிருக்கே? அண்ணன் கிற உரிமையை உனக்கு அவசியமான போது மட்டும் எடுத்துக்கிற அந்த ஒருதலைப்பட்ச மான உரிமை யாருக்கு வேணும்?

'மேலே படிக்க வைக்க முடியலேன்னு, ஆமாம் முடியலேன்னு சொல்லி அதை ஒப் புக்கிறதுக்கு வக்கில்லாமல், பொட்டப் புள்ளைன்னு அடிச்சுச் சொல்லித்தானே வீட்ல உட்கார வெச்சீங்க? இப்ப என்னால உங் களுக்கு வருமானம் வரும்னு தெரிஞ்சதுனால இந்தப் பொட்டப் புள்ளைக்கு ஆம்பிளைக்குச் சமமானஅந்தஸ்துகொடுத்துவெளியில அனுப் பத் தீர்மானம் பண்ணிட்டீங்களா? ஐந் தறிவுள்ள பிராணி மாதிரி பாவித்து வயத் தில் பொறந்த பொண்ணை ஒடுக்கி வப்பீங்க. ஆனா உங்களுக்குத் தேவையாயிருக்கும் போதுஅவள் மனுஷ அவதாரம் எடுக்கணும் இல்லே? என்னால முடியாது, முடியாது! முடியவே முடியாது!'

மனத்திற்குள் குமுறிக் கொண்டிருந்த உணர்ச்சிப் பிரவாகத்தில் அருணா தடு மாறிக் கொண்டிருந்த போது அவள் தாயும் அண்ணனும் உள்ளே நுழைந்தார்கள்.

''எங்க கம்பெனியிலேயே உனக்கு ஒரு வேலை போட்டுக் கொடுக்க ஏற்பாடாகி யிருக்கு. நாளையிலிருந்து போகணும்'என்ன?''

அவனுடைய அபிப்பிராயத்தை எதிர் பாராத உத்தரவு போலவே அந்தக் கேள்வி தொனித்த போதிலும், தன் முகத்தையே இருவரும் ஆவலோடு நோக்குவது அருணா வுக்குப் புரிந்தது.

'பொண்ணுக்குச் சம உரிமை கொடுக்கா விட்டாலும் மனுஷ ஜன்மமாகக் கூட மதிக் கத் தெரியாத மனிதர்களுக்கிடையே வாழும் வாழ்க்கையில் இந்த வேலை உனக்கு ஒரு அபூர்வ சந்தர்ப்பம். லைஃப்ல ஒரு ஓபனிங் கெடச்ச மாதிரி. இந்தச் சமயத்தில மறுக் காம ஒத்துக்கிட்டு, எப்ப வேலைன்னு வெளி யில் கிளம்பியாச்சோ நல்ல வேலையா நிறையச் சம்பளம் கிடைக்கிற மாதிரி முயற்சி பண்ணலாமே. அண்ணனுக்கும் உதவியாயிருக்குமே? என்று சொல்லிச் சொல்லியே நல்ல வேலைக்குத் தேவையான மேற் படிப்பையும், வேலை சம்பந்தப்பட்ட இதர 'கோர்ஸ்'களையும் பயில ஆரம்பித்து வாழ்க்கையில் முன்னேற வழி வகுத்துக் கொள்! உணர்ச்சி வேகத்தில் கோபப்பட்டு இதை விட்டாயோ அவ்வளவுதான். தொலைந்தாய்! பொட்டப் புள்ளை, பொட் டப் புள்ளைன்னு சொல்லியே தலை நிமிர ஒட்டாமல் அடித்து விடுவார்கள்.'

மனத்திற்குள் நடைபெற்ற போராட்டத் தில் விவேகம் கோபத்தை வென்றது. அருணாவின் இறுகிய இதழ்கள் பிரிந்து, ''சரி!'' என்ற ஒற்றைச் சொல் வெளி வந்தது.



New Philips Ferro Cassette now available in India.

# At last ! A cassette that won't damage your recording head

Philips, the inventors of the world's first cassette bring you a world-class cassette.

**International quality tape**
Tape that won't snap or tear or stretch; a smooth and even coating; superior tonal response; high signal-to-noise ratio. With a precision mechanism to prevent jamming and snapping of tape.

Ask for it at your Philips dealer today.



Also Philips Ferro Popular at a popular price.

**PHILIPS**

*PHILIPS—the trusted Indian household name for over fifty years.*

OBM/9435

# வலஞ்சுழியில் வலம்புரி விநாயகர்

— ஆனந்தி —

ஏரண்டர் என்று ஒரு முனிவர் இருந்தார். சிவபக்தர். இவருடைய மகத்தான தியாகத்தினால் தமிழ் நாட்டுக்கு ஒருபெரும் நன்மை ஏற்பட்டது.

குடமலையிலிருந்து புறப்பட்டு வந்த காவேரி நதி தென் தமிழ்நாட்டில் குடமூக்குக்கு அருகில் வந்தபோது ஒரு பெரிய ஆழமான துவாரத்தில் பாய்ந்து விட்டது. தண்ணீர் ஓடவில்லை. ஆதிசேஷன் சிவபூஜை செய்ய பூமியைத் துளைத்துக் கொண்டு வந்த வழி அது. காவேரி பாதாளத்துக்குப் பாய்ந்து விட்டது. ஓர் அரசனோ தபஸ்வியோ மனமொப்பித் தன்னையே பலி கொடுத்தால் பிலத்துவாரம் மூடி, நீர் மேலே பாய முடியும் என்று தெரிந்தது. இதைக் கேட்ட ஏரண்ட முனிவர் யோசிக்காமல் அந்தப் பள்ளத்தில் குதித்துப் பிராணத் தியாகம் செய்து விட்டார். பிறகுதான் காவேரி வலப்பக்கமாகச் சுழித்து ஓடத் தொடங்கியதாம்.

திருவலஞ்சுழி தலத்துச் சிவாலயத்தில் நாட்டுநலனுக்காகத்தம் உயிரையே கொடுத்த ஏரண்ட முனிவருக்குச் சந்நிதி இருக்கிறது.

சுவாமிமலை ஸ்டேஷனுக்கு அருகில் இருக்கிறது இந்தத் தலம். தரிசனம் செய்யப் போகும்போதே 'இந்த இடம் சோழ மன்னர்கள் வசித்த இடமல்லவா? ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் இங்கே எவ்வளவு கோலாகலமாக இருந்திருக்கும்! குதிரை பூட்டிய ரதங்களும், அரசிளங்குமரிகளைச் சுமந்த பல்லக்குகளும் இந்த வீதியில் உலவிக் கொண்டிருந்திருக்குமே? இந்த அரிசிலாற்றில்தானே குந்தவைப் பிராட்டியாரும் ராஜராஜ சோழ தேவரின் காதலியான வானதியும் படகுகளில் சென்றிருக்கவேண்டும்' என்ற நினைவு எழுந்தது.



○ பைரவர் கோவில் வெளிச்சுவரில் விநாயகர்

திருவலஞ்சுழியில் உள்ள சிவாலயம் அரசர்கள் அடிக்கடி வந்து தொழுத ஆலயம். அருகில் உள்ள பட்டீச்சரம், பழையாறை முதலிய இடங்களில் சோழ மன்னர்கள் வாழ்ந்த மாளிகைகள் இருந்தன. இதைப் பராந்தகச் சக்கரவர்த்தி 10ஆம் நூற்றாண்டில் கற்றளியாகக் கட்டினார் என்று வரலாற்று ஆசிரியர்கள் கூறுகின்றனர்.

விரை கமழு மலர்க் கொன்றைத்
தாரான் கண்டாய்!
வேதங்கள் தொழ நின்ற நாதன் கண்டாய்!
அரையதனில் புள்ளியதள் உடையான்
கண்டாய்!
அழல் ஆடி கண்டாய்! அழகன் கண்டாய்!
வருதிரை நீர்ப் பொன்னி வலஞ்சுழியான்
கண்டாய்!

எனக் காவேரி இங்கே வலமாகச் சுழித்து ஓடுவதை உணர்த்துகிறார் நாவுக்கரசர் பெருமான்.

○ சுவேத விநாயகர் கோவில்



முன் வாயிலைக் கடந்து உள்ளே சென்றால் இடது பக்கம் ஒரு தென்னஞ் சோலையும் வலது பக்கம் திருக்குளமும் இருக்கின்றன.

மதில் சுவரில் உள்ள ஓர் இடைவெளியின் வழியே ஒரு பாழடைந்த சிறு கோயில் தெரிகிறது. காலை வேளையாதலால் பல வாலாட்டிக் குருவிகளும், ஒரு கறுப்பு



✲ அழகான நடராஜர்

நிறக் குருவியும் அங்குமிங்கும் திரிகின்றன. சந்தில் புகுந்து கோவிலை நெருங்கும்போதே கல்வெட்டுக்கள் புலனாகின்றன. பழைய சோழர் கோயில் என்பது புலப்படுகிறது. வெளியில் விநாயகர் குடையின் கீழ் நிற்கிறார். வலமாக வந்து பார்த்தால் கோவிலின் உள்ளே பைரவமூர்த்தி. ஆளுயர வடிவம். பின்னமாகி யிருக்கிறது. கரங்களில் ஆயுதங்கள்.

இது க்ஷேத்திரபாலரின் கோவில் என்று அறிகிறோம். உலகமாதேவியார் திருப்பணி செய்த கோவில். விமலாதித்த தேவர் தேவியாரான குந்தவை நாச்சியார் நிவந்தங்கள் கொடுத்துள்ளார். ராஜராஜ சோழ தேவர் ஹிரண்ய கர்ப்பம் என்ற மிக உயர்ந்த தானத்தைச் செய்த காலத்தில் மிகுந்த பொன் மலர்களை இந்தக் கோயிலுக்கு அர்ச்சனை செய்யக் கொடுத்தாராம்.

க்ஷேத்திரபாலரைத் தரிசனம் செய்த பின் ஏற்கெனவே நிறையக் கேள்விப்பட்டிருந்த வெள்ளை வாரணரைத் தரிசிக்க ஆவலுடன் செல்கிறோம். கோவிலை நெருங்கும்போதே அது ஒரு விமானத்தைப் போல் சக்கரங்களுடன் அமைந்திருப்பதைக் காண்கிறோம்.

அலங்காரத் தூண்களும், கல் குத்து விளக்குகளும் உள்ள மண்டபத்தை இந்திரனே நிர்மாணித்ததாக ஐதீகம். வரலாற்றுப்படி இந்த வெள்ளை வாரணர் கோவில் மூன்றும் குலோத்துங்க மன்னன் காலத்தில் பன்னிரண்டாம் நூற்றாண்டில் கட்டப்பட்டது.

கருவறையில் உள்ள விநாயகர் வலது பக்கம் தும்பிக்கையைத் திருப்பி இருப்பதால் வலம்புரி விநாயகர் என்று அழைக்கப்படுகிறார். சின்னஞ் சிறிய வடிவம். ஆயினும் மிகக் கீர்த்தி பெற்றவர். மகாராஷ்டிர தேசத்திலே கூட இவர் பெருமை பேசப் படுகிறது.

பாற்கடலைக் கடைந்தபோது விஷம் உண்டாயிற்று அல்லவா? இந்திரன் கடல் நுரையால் விக்நேச்வரரைப் பிடித்துப் பூஜை செய்த பிறகே தேவர்கள் அமுதம் பெற்றார்கள் என்று புராணம் கூறுகிறது. அபிஷேகம் கிடையாதாம். பச்சைக் கற்பூரம் சாத்தி வழிபடுவதுதான் வழக்கம்.

இங்கே சந்நிதிக்கு எதிரே ஒரு சிற்பக் கலை அற்புதம் இருக்கிறது. ஒரே கல்லில் செய்த கருங்கல் பலகணி. சலவைக் கல் போல் பளபளப்பு.

முன் காலத்தில் சிற்ப வேலைகளை ஒப்புக் கொள்ளும்போது ஆவுடையார் கோவில் கொடுங்கை, வீழிமிழலை வௌவால் அத்து மண்டபம், வலஞ்சுழிப் பலகணி நீங்கலாக மற்ற எல்லாம் செய்து தருவதாக ஒப்பந்தம் செய்து கொள்வார்களாம். பலகணியைப் பார்க்கும்போது இது நியாயம்தான் என்று தோன்றுகிறது. எப்படித்தான் இழைத்தார்களோ? பெயர் தெரியாத ஒரு சிற்பி இதை ஒரு வழிபாடாகவே ச்ரத்தையுடன் செய்திருக்க வேண்டும்.

இந்தச் சிவாலயத்தில் சுவேத விநாயகருக்கே முக்கியத்துவம் இருப்பதும், அவருக்கே உற்சவங்கள் நடப்பதும் ஒரு விந்தை. இது கணபதியின் ராஜதானி என்று கூறப் படுகிறது. தக்ஷிணவர்த்தம் என்றும் திருவலஞ்சுழிக்குப் பெயருண்டு. ஆவணித்திங்கள் வளர்பிறைச் சதுர்த்தியான பிள்ளையார் சதுர்த்தியில் மிகப் பெரிய விழா நடைபெறும். இந்திரன் வந்து பூஜிப்பதாக ஐதீகம்.

வலஞ்சுழி விநாயர் பிரணவ ஸ்வரூபியாக விளங்குகிறார் என்று காஞ்சி முனிவர் கூறியிருக்கிறார்.

✲ ✲ ✲

திருவலஞ்சுழியுடைய மகாதேவர் கோவில் சந்நிதியில் நிற்கும்போது நக்கீர தேவனார்

○ கோவில் கோபுரம்



பாடிய அகத்துறைப் பாடல் ஒன்று நினைவுக்கு வருகிறது.

தான் ஏறும் ஆன் ஏறு கை தொழேன்
    தன் சடை மேல்
தேன் ஏறு கொன்றைத் திறம் பேசேன்
    வான் ஏறு
மையாருஞ் சோலை வலஞ்சுழியான்
    என் கொல் என்
கையார் வளை கவர்ந்த வாறு

## அருள்வாக்கு

சேவை என்று தெரியாமலே அவரவரும் தமது குடும்பத்துக்காகச் சேவை செய்கிறோம். அதோடு நமக்குச் சம்பந்தமில்லாத குடும்பத்துக்கு, ஊருக்கு, நாட்டுக்கு, சர்வ தேசத்துக்கும் நம்மால் முடிந்த சேவையைச் செய்ய வேண்டும் என்கிறேன். நமக்கு எத்தனையோ கஷ்டங்கள், உத்தியோகத்தில் தொந்தரவு, சாப்பாட்டுக்கு அவஸ்தை, வீட்டுக் கவலை இத்யாதி இருக்கின்றன. நம் சொந்தக் கஷ்டத்துக்கு நடுவில் சமூக சேவை வேறு என்று எண்ணக் கூடாது. உலகத்துக்குச் சேவை செய்வதாலேயே சொந்தக் கஷ்டத்தை மறக்க வழி உண்டாகும். அதோடு கூட 'அசலார் குழந்தைக்குப் பாலூட்டினால் தன் குழந்தை தானே வளரும்' என்றபடி நம்முடைய பரோபகாரத்தின் பலனாக பகவான் நிச்சயமாக நம்மைச் சொந்தக் கஷ்டத்திலிருந்து கைதூக்கி விடுவான். ஆனால் இப்படி ஒரு லாப நஷ்ட வியாபாரமாக நினைக்காமலே பிறர் கஷ்டத்தைத்தீர்க்கநம்மாலானதைச்செய்ய ஆரம்பிக்க வேண்டும். ஆரம்பித்து விட்டால் போதும். அதனால் பிறத்தியான் பெறுகிற பலன் ஒரு பக்கம் இருக்கட்டும்; நமக்கே ஒரு சித்த சுத்தியும், ஆத்ம திருப்தியும் சந்தோஷமும் ஏற்பட்டு அந்த வழியில் மேலும் மேலும் செல்வோம்.

- ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராசார்ய சுவாமிகள்.



மையல் கொண்ட தையலார் தம் உடல் சோர்ந்து வாடி இளைத்து வருந்துவதை 'வளைகள் தாமே கழன்று விழுந்துவிட்டன' என்றும், 'என் கை வளைகளை அவன் கவர்ந்து விட்டான்' என்றும் குறிப்பாகச் சொல்வது கவி மரபு.

''நான்தான் அவர் ஏறுகின்ற காளையைத் தொழுது வணங்கவில்லையே! அவர் சடை மீது அணிந்துள்ள கொன்றைக் கண்ணியின் அழகைப் பற்றியோ மணத்தைப் பற்றியோ ஒன்றுமே பேசவில்லையே! என் கை வளைகளை வலஞ்சுழியான் ஏன் கவர்ந்து சென்றார்?''. என்று தன் காதலை மறைத்துப் பேசுகிறாள் தலைவி. பெருமான் பெயர் சடைமுடி நாதர். ஈசன் கங்கையைத் தாங்குவதால் குளிர்ந்த சடையைப் பற்றிப் பேசுவது பொருத்தம். சிறிது பொருமையும் த்வனிக்கிறதோ?

இறைவனுக்குக் கற்பக நாதேச்வரர் என்றும் ஒரு பெயர். இறைவி பெரியநாயகி. கிழக்கு நோக்கிய சந்நிதி. தனிக் கோட்டம். பராசக்தி ஒரு முனிவருக்குக் குமாரியாகப் பிறந்து இந்தத் தலத்தில் சிவபெருமானை மணந்து கொண்டார். அதனால்,'சக்திவனம்' என்றும் பெயர் பெற்றது இந்தத் தலம்.

அஷ்ட புஜ மகா காளி சற்றுத் தலையைச் சாய்த்துப் புன்னகையுடன் வீற்றிருக்கிறாள். நடராஜப் பெருமானின் வடிவமும் இருக்கிறது. சருங்கல்லில் ஆடல் வல்லானின் சிற்பத்தை அபூர்வமாகவே காண முடியும்.

சுவாமிமலைக்கும் திருவலஞ்சுழிக்கும் இடையில் இரண்டு ஆறுகள் ஓடுகின்றன. ஒன்று அரிசிலாறு. மற்றொன்று காவிரி. அரிசிலாறுதான் வலஞ்சுழித்து ஓடுகிறது. காவேரி முன்போலவே பாதாளம் சென்று விட்டதோ என்று அதிசயிக்கிறோம். ஆடிப் பெருக்கன்று கூடக் காவிரியில் தண்ணீர் இல்லை. அங்கங்கே சிலர் கிணறு போல் ஊற்று எடுத்துக் கொண்டிருக்கிறார்கள்.

ஆற்றுப் பெருக்கற்றுஅடிசுடுநாளுமவ்வாறு
ஊற்றுப் பெருக்கால் உலகூட்டும்

என்று எப்போதோ படித்தது ஞாபகம் வருகிறது.

''என் நெஞ்சமே! நீ என்ன புண்ணியம் செய்தாய்? கரைகளில் மணிகளும் முத்துக்களும் சிதறிக் கிடக்கும் காவேரியால் சூழப்பட்ட திருவலஞ்சுழி நாதனைப் புகழ்ந்து பாடி வழிபடுகிறாயே! நீ செய்த நல்ல வினைகளில் எந்தப் புண்ணியம் இந்தப் பேற்றை அளித்தது?'' என்று ஞானசம்பந்தர் வியக்கிறார்.

''என்ன புண்ணியஞ் செய்தனை நெஞ்சமே
    இருங்கடல் வையத்து
முன்ன நீ புரி நல்வினைப் பயனிடை
    முழு மணித் தரளங்கள்
மன்னு காவிரி சூழ்திரு வலஞ்சுழி
    வாணனை வாயாரப்
பன்னி யாதரித்து ஏத்தியும் பாடியும்
    வழி படு மதனாலே.

புகைப்படங்கள்: என். ராமகிருஷ்ணா



# பல்லவ
# பஸ்ஸ

**ஒரு நாள் நகைச்சுவை நடிகர் குண்டு கல்யாணத்தை அழைத்துக்கொண்டு நம் நிருபர் பல்லவன் பஸ்ஸில் பயணம் செய்த போது...**

அசோக் பில்லர் பஸ் ஸ்டாப்.

குண்டு கல்யாணம் ஆட்டோவில் வந்து இறங்கி, பஸ் ஸ்டாப்பில் வந்து நின்றதும், பஸ்ஸுக்குக் காத்திருந்தவர்கள் கண்களில் ஒருவித ஆச்சரியம். இவருக்கு இங்கே என்ன வேலே?

''டேய்! குண்டு கல்யாணம்டா!'' இரண்டு பேர் தாழ்ந்த குரலில்.

குண்டு கல்யாணமோ: ''சார்! மணி எட்டரை. பஸ் ஸ்டாப்பிலும் கூட்டம். பஸ்ஸிலும் ஜனங்கள் தொங்கிக்கிட்டுப் போறாங்க. ஒரு சின்ன வேண்டுகோள்....''

''என்ன?''

''ரொம்பக் கூட்டம் இருக்கிற பஸ்ஸில போக வேண்டாம். எனக்கும் கஷ்டம். ஜனங்களுக்கோ ரொம்பக் கஷ்டம்.''

''நீங்க ஒண்ணு! ரொம்பக் கூட்டம் இருந்தா பஸ் இங்க நிக்கவே நிக்காதுங்க. கண்டக்டர் டபுள் விஸில் குடுத்துருவாரு.''

கொஞ்ச நேரம் ஆயிற்று.

12-டி பஸ் வந்தது.

அதிகக் கூட்டம் இல்லே.

''இதுலேயே போயிடலாமா?''

''ம்.''

பஸ்ஸை நோக்கி நடக்க—

சுற்றிலும் இருந்தவர்கள் மௌனச் சிரிப்புடன் பார்த்தார்கள்.

''ரொம்ப அவசரமா? இருங்க... நாங்க முதல்ல ஏறிடறோம். அப்புறமா நீங்க ஏறிக்குங்க.''

ஒரு பெண்மணி சொல்ல...

''பஸ்ல இடமிருந்தா!'' என்று ஜோக்கடித்தார் ஒருவர். பஸ்ஸில் ஒரு வழியாய் ஏறிக் கொண்டோம்.

கு. கல்யாணம் படிக்கட்டுப் பக்கத்திலேயே நின்று கொண்டிருக்க, ஒருவர் ''கொஞ்சம் நகருங்க'' என்றார்.

''உள்ளே கூட்டமா இருக்கு. காற்று வராது. பேஜாரா இருக்கும். அதான் இப்படியே...''

''நீங்க சொல்றது சரி. ஆனா நீங்க இங்க நிக்கறதாலே எங்களுக்கெல்லாம் பேஜாரா இருக்குதே!'' என்றார் ஒருத்தர் கிண்டலாக.

''டிக்கட்...டிக்கட்...''

கண்டக்டருக்குச் சில நிமிஷங்கள் ஆச்சரியம்.

''வாங்க.... வாங்க...''

''என்ன கண்டக்டர்! தினமும் நாங்க இந்த பஸ்லதான் காலேஜ் போறோம். இன்னைக்கு ஒரே ஒரு நாள் இவர் வந்திருக்காரு. ஆனா, வரவேற்பெல்லாம் பலமா இருக்கே!'' கல்லூரி மாணவர் சசிதரன் கமெண்ட்.

இரண்டு ரூபாயை நீட்டி, ''மூணு மியூஸிக் அகாடமி'' என்றேன்.

''குண்டு கல்யாணத்துக்கு இது. உங்களுக்கும் போட்டோகிராபருக்கும் இன்னும் ரெண்டு டிக்கட் வாங்குங்கன்னு ஒரு ஜோக் அடிக்கலியா?''—குண்டு கல்யாணமே ஜோக் அடித்தார்.

''என் ஸன், டாட்டர் ரெண்டு பேரும் உங்க ஃபேன். ஸ்கூல்ல படிக்கிறாங்க.''

''மழலைப் பட்டாளம், தில்லு முல்லு படத்திலெல்லாம் நீங்கதானே நடிச்சீங்க?''

''ஆமாம்... ஆமாம்... நானேதான்! சார்! முன்னே நகருங்க!''

ஒருவரும் நகருவதாய்க் காணோம்.

''சே....சே! நல்ல ஜனங்க... தானும் முன்னேற மாட்டாங்க! அடுத்தவனேயும் முன்னேற விட மாட்டாங்க!''

''என்ன! பஸ்ல வரீங்க?''

''இன்னிக்கு ஷூட்டிங் இல்லேயா?''

''இருக்கு. பகல் ஒரு மணிக்கு.''

''எங்க?''

''வாஹினியில.''

''என்ன படம்?''

''சொன்னால் நம்ப மாட்டீங்க.''

''இல்லே. நீங்க சொல்லுங்க. நாங்க நம்பறோம்.''

''இல்லேங்க...அதான் படத்தோட பேர்!''

''ஓகோ!''

''ஏங்க நீங்க ரொம்பச் சாப்பிடுவீங்களா?''

''ஐயையோ! அப்படி யெல்லாம் இல்லீங்க!''

''என்ன சாப்பிடுவீங்க?''

''இட்லின்னு ஆறே ஆறு! தோசைன்னு நாலு! சாப்பாடுன்னு கொஞ்சம்தான்!''

''உங்க உடம்பு ஏன் இப்படி இருக்கு?''

''என் உடம்பு வாகு அப்படி!''

''சார்! முன்னே நகருங்க.''



நகர்ந்தார்.

''ஆட்டோகிராஃப்''! தன் நோட்டுப் புத்தகக் கடைசிப் பக்கத்தை நீட்டினார் நீல டிராயர், வெள்ளைச்சட்டையில் ஒரு மாணவர்.

''ஏதாவது எழுதி, கையெழுத்துப் போட்டுக் குடுங்க.''

''என்ன எழுத?''

''உடம்பைப் பெருக்காதே! அறிவைப் பெருக்குன்னு எழுதுங்களேன்!''

சிரிப்பு.

''ஆல் தி பெஸ்ட்.

அன்புடன்

குண்டு கல்யாணம்''

ஆட்டோகிராஃப் போட்டுத் தந்தார்.

''நீங்க எங்கேயாவது போகணும்னு எப்படிப் போவீங்க?''

''ஷூட்டிங்குக்குன்னு புரொடக்ஷன் யூனிட் கார் வந்து அழைச்சுக்கிட்டுப் போகும். ஷூட்டிங் முடிஞ்சதும் கொண்டு வந்து விடும். மற்ற இடங்களுக்கெல்லாம் ஆட்டோதான்! அதுகூட மீட்டருக்கு மேலே ரெண்டோ மூணோ குடுத்தாத்தான் வருவேன்னு ஆட்டோ டிரைவர் சண்டிப்டா சொல்லிடுவாரு. நானும் சரின்னுடுவேன். சமயத்துல ரிக்ஷாவிலேயும் போறது உண்டு. நான் மோட்டார் வைத்த ரிக்ஷாவில தான் போவேன். ஆள் ஓட்டும் ரிக்ஷாவில ஏற மாட்டேன். இது என் பாலிஸி.''

''தட்ஸ் குட்'' பெரியவர் ஒருவர்.

''ஸ்டெல்லா!'' என்றார் கண்டக்டர்.

மாணவிகள் ரொம்பப் பேர் இறங்க, பஸ் காலி.

கண்டக்டர் கல்யாணத்திடம் வந்தார். ''நீங்க இன்னிக்கு என் பஸ்ல வந்ததுல எனக்கு ரொம்ப சந்தோஷம். வீட்ல போய் என் ஒய்ஃப், பசங்க கிட்டே எல்லாம் பெருமையா சொல்லுவேன்.''

''சந்தோஷம்.''

''மியூஸிக் அகாடமி இறங்குங்க.''

இறங்கினோம்.

''பஸ் பயணம் எப்படி இருந்தது?''

''ஜாலியாத்தான் இருந்தது. ஸ்கூல் பசங்களெல்லாம் என்னை ஏதோ விசித்திரமா நினைச்சுத் தொட்டுத்தொட்டுப் பார்த்தாங்க. இது பரவாயில்லேங்க. மழைலைப் பட்டாளம் ரீஸான புதுசல, ஒரு தடவை தெரியாத்தனமா பஸ்ல ஏறிட்டேன். எல்லாரும் தள்ளிக் கிள்ளி ஒரு வழி பண்ணிட்டாங்க. ஏண்டாப்பா பஸ்ல ஏறினோம்னு ஆயிட்டது. ஆனாலும்....''

''என்ன?''

''எனக்கென்னமோ இப்ப பஸ்ல வந்ததால ஜனங்களுக்குக் கொஞ்சம் கஷ்டம் ஏற்படுத்திட்டமோன்னு....''

''நீங்க ஒண்ணு! நம்ம ஜனங்க இதைவிட அதிகக் கஷ்டமெல்லாம் அனுபவிச்சிக்கிட்டு இருக்கிறவங்க. இதெல்லாம் நத்திங்.''

தொகுப்பு: எஸ். சந்திரமௌலி

போட்டோ: ஸ்பைடர் மேன்

✖ கூட்டமில்லாத பஸ் வருமா?



# குண்டு கல்யாணம்



✖ ❶ முன்னாலே போங்க!



# மாறுதல் வரும்

## சுஜாதா

பூர்ணம் நியூ தியேட்டர்ஸ் வழங்கும்

## வாசல்

| | |
|---|---|
| கௌரி சங்கர் | —அப்பா 50 வயது |
| சோபா | —அம்மா 45 வயது |
| சாந்தி | —பவானி 18 வயது |
| ரவி ஜகந்நாதன் | —ரவி 20 வயது |
| மாஸ்டர் மகேஷ் | —நாணு 12 வயது |
| மாஸ்டர் ராஜேஷ் | —கிட்டு 7 வயது |
| பூர்ணம் விசுவநாதன் | —மாமா 60 வயது |
| குருப்பிரகாஷ் | —தங்கசாமி 45 வயசு |
| கே. பி. குமார் | —ஆட்டோ டிரைவர் |
| பல்தேவ் | —செல்வராஜ் 23 வயது |

புகைப்படங்கள்: ரங்கேஷ்

குறிப்பு: இந்த நாடகத்தில் பாத்திரங்களின் பிரவேசங்கள் துல்லியமாகச் சொல்லப்படவில்லை. டைரக்டரின் உசிதம்போல ஸ்கிரிப்டுக்குப் பொருத்தமாக வைத்துக் கொள்ளலாம்.

இடைவிடாது அடுத்தடுத்து சம்பவங்கள் ஒன்றையொன்று துரத்த வேண்டியது முக்கியம்.

(திரை விலக, ஸ்பாட் வெளிச்சம் மேடையில் வலது பக்கம் இருக்கும் பிரவேச வாசலை மட்டும் காட்டுகிறது பின்னணியில் பவானியின் குரல் ஒலிக்கிறது.)

பவானி (குரல்): வாசல்! வருஷத்துக்கு ஒரு முறை மாமா இந்த வாசல் வழியாத்தான் வருவார். ஒரு நாள் விஜயம் எங்களுக்கு எப்போதும் உற்சாக மளிக்கிற விஷயம். மாமாவுக்குத் தெரியாத—அவரால் செய்ய முடியாத — எதுவும் இடையாது. நீங்கள்தான் சந்திக்கப் போகிறீர்களே! அதற்கு முன் எங்கள் குடும்பத்தைப் பற்றிச் சொல்லிவிடுகிறேன். அப்பா, அம்மா, நான், ரவி, நாணு, கிட்டு. மாமா வருகிறார் என்பதில் அப்பாவைத் தவிர எங்கள் எல்லோருக்கும் சந்தோஷம். சீக்கிரமே அன்று எழுந்து விடுவோம்.

• • •

(மேடை இப்போது முழுவதும் ஒளி பெற நடுத்தரக் குடும்பத்தின் ஹால் தெரிகிறது. கிரிக்கெட் மட்டை, ஸ்வாமி படம், படிப்பு மேஜை, ராணி காலண்டர், தையல் மிஷின், சுருட்டி வைக்கப்பட்ட படுக்கைகள், சுவரில் பால் கணக்கு என்று உசிதம் போல் அமைத்துக் கொள்ளலாம். மேடையில் சுறுசுறுப்புத் தெரிகிறது. அம்மா குளித்து விட்டு ஸ்வாமி படத்துக்குக் குங்குமம் இட, நாணு

மாமா: ஆட்டோக்காரன் பத்து ரூபாய்க்கும் சில்லறை தரமாட்டான்னு எதிர்த்தாப்பல ஒரு கடையில இன்னி வாங்கினேன். (எடுத்து) இந்தாரும் மாப்பிள்ளே எடுத்துக்கோம். அடிச்சேர் பிரைஸ்!

கண்ணைக் கசக்கிக் கொண்டு குறுக்கே நடக்க, பவானி குளிக்கத் தயாராகச சோப்புப் பெட்டி, மாற்று ஸாரி இவைகளுடன் செல்ல, ரவி பல் தேய்த்துக் கொண்டே செய்தித் தாளைப்பார்த்துக்கொண்டே செல்ல, எல்லோரும் போகும்போது அம்மா விடம், 'அம்மா, இன்னிக்கு மாமா வரா இல்லே?' என்று கேட்டுக் கொண்டே செல்கிறார்கள். அம்மா ஆமாம்... ஆமாம்டா... ஆமாண்டி கண்ணு' என்று உசிதம் போல் பதில் அளித்துக் கொண்டிருக்க, அப்பா நுழைகிறார்.)

அப்பா: என்ன இது? ஊரே எழுந்துடுத்து? தீபாவளியா என்ன?

அம்மா: தெரியாத மாதிரி கேக்கறேளே! இன்னிக்கு எங்கண்ணா வரார்.

அப்பா (அதிர்ந்து போய்): என்னது?(மேடையில் தேடுகிறார்.) என் செருப்பு, ஷேவிங் செட், பேனா, சர்சீப் எல்லாத்தையும் பத்திரப்படுத்தனும்')

அம்மா: அதெல்லாம் கொண்டு வருவார். எப்பவோ ஒரு தடவை எடுத்துட்டார்னு ஊட்டி அடிக்காதீங்கோ.

அப்பா: இப்ப உங்கண்ணா எதுக்கு வரார்?

அம்மா: ஏன், வரப்படாதா? வருஷத்துக்கு ஒரு தடவை வரார்.

அப்பா: ஒரு நாள்ன எவ்வளவு பிரளயமோ?

அம்மா: சும்மா பெரிசு படுத்தாதீங்கோ.

அப்பா: உனக்கென்ன தெரியும்? என்கிட்டே இருக்கிறது அத்தனையும் குடைஞ்சு ரிப்பேர் பண்ணிடுவார். எங்க அந்த டேப் ரிக்கார்டர்? அதை முதல்ல பூட்டி வை. இதப் பாரு, இந்தத் தடவை உங்கண்ணா தையல் மிஷின், டிரான்ஸிஸ்டர் எதையாவது ரிப்பேர் பண்ணித் தரேன்னு தொட்டார்னா எனக்குக் கெட்ட கோபம் வரும்.

அம்மா: அவருக்கு அதுக்கெல்லாம் எங்க டயம் இருக்கும்! கால்ல ரெக்கை கட்டிண்டு பறப்பார்.

அப்பா: அதெல்லாம் ஒண்ணுமில்லே. வீட்டையே நாசம் பண்ணிட்டுப் போயிடுவார் ஒரு நாள்ள. நல்லவேளை, இன்னிக்கு பசங்களுக்கு ஸ்கூல் காலேஜ் இருக்கு. எனக்கு ஆபீஸ் இருக்கு.

● ● ●

பவானி (குரல்): நான் முன்னால் சொன்னது போல, அப்பாவுக்கு மட்டும் மாமா வருவதில் எப்போதும் அபிப்ராய பேதம் உண்டு. அன்று பூரா கடுகடு என்றுதான் இருப்பார்.

● ● ●

(அப்பா பின் கையைக் கட்டிக் கொண்டு குறுக்கும் நெடுக்குமாக நடக்க)

பவானி (குரல்): மாமா வருவதே ஒருவிதமான பந்தாவுடன்தான்.

● ● ●

(ஆட்டோ ரிக்ஷா வந்து நிற்கும் சப்தம் கேட்க, எல்லோரும் 'மாமா வந்தாச்சு, மாமா வந்தாச்சு' என்று வாசலை நோக்கி ஓட, தனியாக

மாமா: ப்ச! என்ன மாப்பிள்ளை நீங்க! பணம் குடுத்திருக்கக் கூடாது! ஆயுதம் கொண்டு வாதுக்குள்ள ரூபாயைக் கொடுத்தனுப்பிச்சுட்டா எப்படி?



ஆர்வத்தைக் கட்டுப்படுத்த முடியாமல் நிற்கும் அம்மாவை அப்பா கவனித்து விடுகிறார்.)

அப்பா: ஏன், நீயும் ஓடேன், பரவாயில்லே. (அம்மா ஓடுகிறாள். அப்பா அறையில் உள்ள சாமான்களைப் பத்திரப்படுத்தும் உத்தேசத்துடன் ஆராய்கிறார். இதற்குள் வெளியே)

குழப்பமான குரல்கள்: வாங்க மாமா, வாங்க மாமா.

மாமாவின் குரல்: வரேன், வரேன். கொஞ்சம் இரு. இந்த ஆட்டோவைப் பேசி முடிச்சுட்டு வந்துடறேன். ஏம்ப்பா வருஷா வருஷம் வரேன். பஸ் ஸ்டாண்டில இருந்து மொத்தம் அஞ்சு கிலோ மீட்டர். கிலோ மீட்டருக்கு எழுபது பைசா மேனிக்கு மூணரை ரூபா. அட, சித்த முன்ன பின்ன வச்சுக்கோ. மூணே முக்கால். உன் மீட்டர் எவ்வளவு காட்டறது?

ஆட்டோ: நீயே பார்த்துக்க. கண்ணு பொட்டையா?

மாமா: இல்லேப்பா, நன்னாத் தெளிவாத் தெரியறது. நாலு ரூவா காட்டறது.

ஆட்டோ: சரி. நாலர் ரூபாயா போட்டுக் கொடு.

மாமா: என்ன நீ? நான் வந்து நாலு ரூபாயே ஜாஸ்திங்கறேன். இந்தா.

ஆட்டோ: யோவ். மீட்டர்ல இருக்கறதைக் கொடுய்யா.

மாமா (சற்றுக் கடுமையாக): மீட்டர் தப்பு. எத்தனை தடவை வந்திருக்கேன். இந்தா. மூணரை ரூபாயை வாங்கிண்டு (கொஞ்சலாக) போப்பா, போ.

ரவி: மாமா, மீட்டர்ல இருக்கறதைக் கொடுத்திடுங்க.

மாமா: (அதட்டி): நீ சும்மாரு. உனக்குத் தெரியாது.

ஆட்டோ: யோவ். வெள்யாடறியா?

மாமா: விளையாடணும்னு சொல்லு. போலீஸ் ஸ்டேஷன்ல போய் விளையாடலாம். வா.

ஆட்டோ: என்னது. போலீஸ் ஸ்டேஷன் போவியா?

பவானி (விறிட்டு): மாமா, கிட்டப் போகாதிங்கோ, என்னத்தையோ எடுக்கறான்.

மாமா: இரும்மா.

ஆட்டோ (விரோதமான குரலில்): யோவ், இப்பச் சொல்லு. ஒயுங்கா அஞ்சு ரூபாயைக் கக்கறியா இல்லேயா?

மாமா (சற்று அதிர்ந்து): கக்க மாட்டேன்னு?

ஆட்டோ: மாட்டியா?

மாமா: மாட்டேன்!

(இப்போது குழப்பமான சண்டையில் பவானியின் கீச்சுக் குரல், மாமாவின் 'கீழ போடப் போறியா இல்லேயா' என்பது போன்ற குரல்கள் கேட்க, மேடையில் இடமிருந்து மாமா பதறிக் கொண்டு பிரவேசிக்கிறார். 'மாப்பிள்ளே சௌக்கியமா' என்று அப்பாவைப் பார்த்துக் கேட்டுவிட்டு, 'அந்த ஆட்டோக்காரனை அனுப்பிடுங்கோ' என்று உள்ளே விரைகிறார். தொடர்ந்து கையில் பெரிய ஸ்பானருடன் ஒரு ஆட்டோ டிரைவர் உள்ளே நுழைய, 'எங்க அந்தாளு? எங்க அவரு?' என்று இரைய, அப்பா அவசரமாக பையிலிருந்து நோட்டு எடுத்து 'இந்தாப்பா அஞ்சு ரூபா, வெச்சுக்கோ, சண்டை போடாமப் போ' என்று கொடுக்க)

ஆட்டோ (அதைப் பிடுங்கிக்கொண்டு): போலீஸ்ல புகார் கொடுப்பாராமில்லே,

அப்பா: அவர் கிடக்கார், நீ போப்பா,

ஆட்டோ: ஜாக்கிரதையா இருக்கச்சொல்லு. ஜாம் பஜார் பக்கம் கொஞ்ச நாளைக்கு வரச் சொல்லாதே.

அப்பா: வரமாட்டார் போப்பா,

ஆட்டோ: தப்ச்சாரு.

(போகிறான். அவன் போனதும் கையில் ஹாக்கி மட்டையுடன் மாமா இடது பக்கத்திலிருந்து உள்ளே வருகிறார்.)

மாமா: எங்கே அவன்? பயந்துண்டு போயிட்டானு?

அப்பா: இல்லே. அஞ்சு ரூபா வாங்கிண்டு போயிட்டான்.

மாமா: ப்ச்! என்ன மாப்பிள்ளே நீங்க, குடுத்திருக்கக் கூடாது. ஆயுதம் கொண்டு வரதுக்குள்ள ரூபாயைக் கொடுத்து அனுப்பிச்சுட்டா எப்படி?

(மற்றவர்கள் உசிதம் போலப் பிரவேசித்து மாமாவைப் பார்த்துக் கொண்டிருக்க, மாமா ஹாக்கி மட்டையை அப்பாவிடம் கொடுத்துவிட்டு)

தப்ச்சான் அவன். நாணு, நீ போய் வாசல்ல சாமான்லாம் இருக்கு, கொண்டு வா.

ரவி: நாணு இல்லே மாமா, நான் ரவி.

மாமா: பின்னே நாணு யாரு?

ரவி: இதோ!

(நாணு சாமான்களை ஒவ்வொன்றாகக் கொண்டு வருகிறான்.)

மாமா: நீதான் ரவியா? மாப்பிள்ளே, உங்க வம்சத்தைக் கணக்கு வச்சுக்கறது கொஞ்சம் கஷ்டம்தான். இந்த வயசில இத்தனை சில்ராளைப் பெத்துப் போட்டுட்டு, கையில ஹாக்கி மட்டையைவெச்சுண்டுதிக்கறேன். புலனடக்கம் வேண்டாமோ? ரவி, மூஞ்சில என்னமோ கறுப்பா இருக்கு. அழி அத்தை!

ரவி: மீசை மாமா.

மாமா: மீசையா? சை! உங்க தாத்தா கேட்டாரானு என்ன ஆகும் தெரியுமா? மீசையை வெச்சுண்டு, (ரவி கண்ணாடியைத் துடைத்து மாட்டிக் கொள்ள) கண்ணாடியும் போட்டுண்டுட்டே—கொஞ்சம் பயமாவே இருக்கு.

• • •

பவானி (குரல்): மாமாவுக்கு என் மேல எப்போதும் பிரேமை. 'பவானி' என்று அவர் கூப்பிடுவதே ஒரு தனி அழகு!

• • •

மாமா: பவானி! பவானிக் குட்டி! வளந்துட்டியே. விச்சா இருக்கியா? (பவானி

''என்னது! அரை மணி நேரம் ஓவர் டைம் அலவன்ஸ் வேணுமா? எதுக்கு?''

''நேத்து ஆபீஸ் முடிஞ்சு அரை மணி நேரம் ஆபீஸிலேயே தூங்கிட்டேன் சார்!''

—கோவை அ. கதிர்வேல்






CASBS-112-203 TAM

நமஸ்கரிக்க) எழுந்திரு. என்னடிது? சீக்கிரமேவ விவாகப் பிராப்திரஸ்து! (அம்மாளைப் பார்த்து) என்ன ஜானகி. பொண்ணு இப்படி திருதிருன்னு வளர்ந்திருக்கு! கல்யாணம் பண்றதா ஏற்பாடு உண்டா? மாப்பிள்ளையானு மட்டையைக் கீழே போட மாட்டேங்கறார். எல்லாரும் சௌக்கியமா? அவன் எங்கே? . ஆர்மோனியம் வாசிப்பானே ஒத்தன்....?

ரவி: நான்தான் மாமா.

மாமா: இன்னிக்கு வாசிக்காதே.

ரவி: நிறுத்திட்டேன் மாமா. அப்பா ஒரு நாள் உடைச்சுட்டார்.

மாமா: என்ன ஓய், ஆர்மோனியத்தைக் கூட உடைக்க ஆரம்பிச்சாச்சா?

அப்பா: நீர் போன தடவை அதை ரிப்பேர் பண்ணிட்டுப் போனப்புறம், பிரசவிச்ச பூனைக்குட்டி மாதிரி அதிலிருந்து சத்தம் வந்துண்டு இருந்தது.

மாமா: எந்தப் பூனைக் குட்டி? தேன் கலர்ல இருக்குமே, அதா? (மாமாவின் பெட்டி, படுக்கை, சாமான்களை நாணு கொண்டு வந்து அவர் முன் வைக்கிறான்.) என்ன டாது. பிளாட்பாரம் மாதிரி நடுக் கூடத்துல கொண்டு வந்து வச்சுட்டே.

நாணு (மேலே இருக்கும் சற்று வாய் அகன்ற அலுமினியக் கிண்ணியைச் சுட்டிக் காட்டி- இதென்ன மாமா, அலுமினியக் கிண்ணி?

மாமா: இதுவா? ஆட்டோக்காரன் பத்து ரூபாய்க்குச் சில்லறை தர மாட்டான்னு. எதிர்த்தாப்பல ஒரு கடைல கிண்ணி வாங்கிண்டேன். (எடுத்து) இந்தாரும் மாப்பிள்ளே. எடுத்துக்கோம். அடிச்சேர் ப்ரைஸ்!

அப்பா: எனக்கு எதுக்கு ஓய் கிண்ணி?

மாமா: கிண்ணி எதுக்கா? எண்ணெய் தேச்சுக்கலாம். க்ஷவரம் பண்ணிக்கலாம். கஞ்சிரா வாசிக்கலாம். வெயில் ஜாஸ்தியாய்டுத்துன்னு தலேல கவுத்துக்கலாம். கரப் பூச்சி வந்தா விளக்குக் கீழே வைக்கலாம். எவ்வளவு உபயோகம்!

அப்பா: வருஷா வருஷம் சில்லறை மாத்தறேன்னு, வீடு பூரா கிண்ணி!... சரிசரி, நான்போய்த் தேகாப்பியாசம் பண்ணிட்டு வரேன்.

மாமா: தேகாப்பியாசமா? அதெல்லாம் எதுக்கு உமக்கு? என் சிநேகிதன் ஒத்தன் இப்படித்தான் ஆசனம் பண்றேன்னு ஆரம்பிச்சு, ஆசனத் துவாரமே அடைச்சுண்டுடுத்து.

அப்பா (அவரை நமஸ்காரம் பண்ணி): ஓய், பசங்க இருக்கறபோது கொஞ்சம் ஒக்கபிலேரியைக் கட்டுப்படுத்திக்கலாம்.

மாமா: ஏம்மா, காப்பி கீப்பி உண்டா?

அம்மா: இதோ கொண்டு வரேண்ணா.

(உள்ளே போகிறாள். அப்பா போகிறார். அதற்குள்—)

மாமா: மாப்ளே! (திடீரென்று சீரியஸ் ஆகி) இப்பத்தான் ஞாபகம் வரது. ஐயாம் ஸோ ஸாரி. உங்க தோப்பனார் போயிட்டாராமே!

அப்பா (அவரை நின்று முறைத்து): ஓய்! அவர் உம்மை விட இளமையா துள்ளி விளையாடிண்டு இருக்கார். நம்மை எல்லாரையும் அனுப்பிட்டுத்தான் போவார்.

மாமா: பின்னே யார் தோப்பனார் போயிட்டார்?

அப்பா: சரி, சரி. எனக்கு அந்த ஆராய்ச்சி எல்லாம் பண்ணிண்டிருக்க நேரமில்லே. நீர் போன தடவை வந்தபோது செருப்பு மாறிப் போச்சு, ஷேவிங் பிரஷ்ஷைக் காணம்.

மாமா: அந்தப் பிரஷ்ஷைப் பள்ளம் தோண்டிப் புதைச்சேன். செருப்பை, தைக்கறவன் கிட்ட நாலணாக் கொடுத்து எடுத்துக்கச் சொன்னேன்.

அப்பா: உங்க பேர் பேப்பர்ல வந்ததாமே?

மாமா (குரலைத் தணித்து): குழந்தைகளெல்லாம் இருக்கறப்ப வேண்டாம். அப்புறம் தனியாச் சொல்றேன். (அப்பா போக, அம்மா கொண்டு வந்த காப்பியை வில்லாக ஆற்றிச் சாப்பிடுகிறார்.) மாப்பிள்ளையோட ஃபாதர் போயிடலையா? இருக்காரா?

அம்மா: குத்துக் கல்லாட்டம் இருக்கார். அப்புறம் சொல்லுங்கண்ணா,எப்படி. குத்தகைக்காரன் எல்லாம் பணம்கொடுக்கறானா?

மாமா: அதை ஏன் கேக்கறே! மொட்டை மொட்டையா மரக்கா அளக்கறான்.காலங் கெட்டுக் கிடக்கு. எனக்கு எதித்தாப்லயே சிகரெட் பிடிச்சுண்டு, 'அய்யரே, உங்க வீட்டுல பொண்ணு எடுக்கலாமான்னு யோசிக்கிறேன்'ங்கறான். கலி முத்திப் போச்சு!

நாணு: மாமா, நான் பாஸ்.

மாமா: அப்படியா? டேய், நீ பாஸ் ஆனதுக்குப் பிரஸண்டா, உனக்கு ஒரு வித்தை சொல்லித் தரட்டுமா?

நாணு (ஆவலுடன்): சரி மாமா.

மாமா: ஒரு ஈ புடிச்சுண்டு வா.

நாணு: ஈயா?

மாமா: ஆமா. அதைச் சாகடிச்சுட்டுப் பொழைக்க வைக்கறேன்.

ரவி: என்ன மாமா புருடா விடறீங்க?

(தொடரும்)



டாக்டர்: என்னங்க இது. கன்ஸல்ட்டிங் பீஸ் கேட்டா அட்ஜஸ்ட் பண்ணிக்கச் சொல்றீங்களே, எதிலே?

நோயாளி: போன வாரம் வந்தப்போ நான் அடிச்ச ஜோக்கை நீங்க எழுதினதாக ஒரு பத்திரிகையிலே பார்த்தேன். அதுக்கு வர்ற சன்மானத்திலே அட்ஜஸ்ட் பண்ணிக்கச் சொல்றேன்!

—நெல்லை சுவாதி

# வீட்டில ராமன் வெளியில கிருஷ்ணன்



**மறுபடியும் சிவகுமார்:** ருத்ர ராதிகாவை முதலில் வழிக்குக் கொண்டு வருகிறார். கல்யாணமான கையோடு பிரச்னைகள் வந்து தாக்கு தாக்கு என்று தாக்க, மூழ்கிக் கரையேறி, மூழ்கிக் கரையேறி, மூழ்கி.... கரையேற விடமாட்டேன் என்று இந்த முறை ஊருக்குப் 'பெரிய' மனிதர் சுப்பாராவ் அவரிடம் வெகுள்வதும், பிரச்னை தனக்கெதிராய்த் திரும்பியவுடன் இயலாமையில் கையைப் பிசைவதும், ஒவ்வொரு கட்டத்திலும் ஓர் எதிர்பார்ப்போடு மனைவியின் அனுசரணைக்கு ஏங்கி ஏமாறுவதுமாய் சிவகுமார் அமர்க்களம்!

**வித்தியாசமான ராதிகா:** பஸ்ஸில் செருப்பைக் கழற்றிக் கொண்டு கனல் வீசுகிற போதே எதிர்பார்ப்புக் கூடுகிறது. தான், தனது என்கிற 'பொஸஸிவ்' பெண். கணவன் மற்ற பெண்களிடம் கவனம் செலுத்துவதைப் பொறுக்க முடியாமல் பொருமும் போதும், தவறு என்று தெரிந்ததும் அவசரமாய்க் குழைந்து போவதுமாய் ஆரம்பத்தில் இருந்துவிட்டு, சாதகமில்லா சந்தர்ப்பங்களில் அவன் சிக்கியவுடன் சந்தேகம் ஆழமாய் வேர் ஊன்றிப் போக, என்ன வெடுக்! என்ன கடுப்! குட் ஷோ!

**புரிந்துகொள்ள முடியாத சுஹாசினி:** குறைந்தபட்சம் 'மூன்றும்' தெரிந்த துடுக்குப் பெண்ணாய் அறிமுகமாகிற ஜோரென்ன, அப்புறம் யாரோ ஒரு தையற்காரர் பின்னால் கூப்பிட்ட குரலுக்குப் போய்விடுகிற ஒன்றும் தெரியாத அப்பாவித்தனமென்ன! தன்னால் பிரச்னை என்று தெரிந்து ராதிகாவைச் சமாதானம் செய்ய முடியாமல் தோற்றுப் போனவுடன் தற்கொலை அளவுக்குப் போய், 'முற்றும்' தெரிந்து செய்கிற தியாகமென்ன 'சிட்டி' பாத்திரம் சிவகுமாருக்கும் ராதிகாவுக்கும் மட்டுமல்ல, நமக்கும் புதிரே.

**சூடான எம். ஆர். கே.:** ஊரில் ராம ராஜ்யம்; உள்ளே கிருஷ்ண லீலை. ஏற்கெனவே நிஜத்திலும் நிழலிலும் நிறையவே பார்த்திருந்தாலும், இவ்வளவு அழுத்தமாய் மனத்தில் நிற்பது இவருடைய சாமர்த்தியம் தான். வேலைக்குச் சேர வருகிற பெண்ணின் தோளில் கையை வைத்து அதை நாலு பேர் அறியச் சொல்லி, நல்ல பெயர் சம்பாதிப்பதென்ன, கொட்டிக் கிடக்கிற சிமெண்டை மோதிரக் கையால் வாரிக் கொட்டுவதென்ன! எல்லாம் தனி ரகம் தான்!

வழக்கமான இளையராஜா; மாறுதலான மணிவண்ணன்!




திருச்சி அகண்ட காவேரியை ஒட்டியுள்ள வெற்றிலை பாக்குக் கடைகளில் ஒரு கண்ணாடியையும் கடைக்கு முன்னால் மாட்டி வைத்துள்ளார்கள். காரணம் — காவிரியில் குளித்து விட்டுச் செல்பவர்கள், தலை வாரிக் கொள்வதற்காகக் கண்ணாடியைப் பார்க்க வருவார்கள்.... அப்படியே கடையிலும் ஏதாவது பொருள் வாங்குவார்களே...! பரஸ்பர உதவி!

—ராஜேஸ்வரி



# சுமங்கலி

**லாரி** டிரைவர் சிவாஜிக்கண்ணு; 'தியாகி'யின் பெண் சுஜாதா. இருவருக்கும் 'இது'. இந்த வயசிலும் நன்றாகவே ஒட்டிக் கொள்கிறார்கள். வெட்கப்படுகிறார்கள்.

ஆசை மனைவி தற்கொலை செய்து கொண்டாள் என்று கேள்விப்பட்டவுடன் துக்கம் தொண்டையே அடைக்க, பிரமை பிடித்துக் கொஞ்சம் கொஞ்சமாய் சுதாரித்து உடைந்து போய் அழுகிறாரே, அந்த இடத்தில் மட்டும் சிவாஜியைத் தவிர வேறு யாரும் அப்படிச் செய்திருக்க முடியாது என்று தோன்றுகிறது.

சிவாஜியும், சுஜாதாவும் இடைவேளைக்கு முன் பிரிந்து போய், க்ளைமாக்ஸில் எதிர் பாராமல் சந்திக்கிற படங்களை யாராவது 'ஸ்கோர்' எடுத்தால் தேவலை.

'ஸ்கோர்' எடுக்க வேண்டிய இன்னொரு விஷயம்: சங்கிலித் திருடர்களுடன் சண்டை போட்டு, பிரபு சங்கிலியை மீட்பது. (சூரப் புலி, 'சந்திப்பு', 'சுமங்கலி!'...) வேறு கற்பனையே கிடையாதா? இருந்தாலும் சண்டைக்காட்சிகளில் சூடு பறக்கத்தான் செய்கிறது. அது சரி, பிரபு காரெக்டருக்கு இந்தப் படத்தில் என்ன வேலை? சும்மா இடைவேளைக்கப்புறம் வந்து தலையைக் காட்டிவிட்டுப் போவதா?

கொஞ்சம் வில்லத்தனம், கொஞ்சம் காமெடி, நிறைய அசட்டுத்தனம் கலந்த, செவிப் பறைகளைச் சிதறடிக்கிற வி. கே. ராமசாமி. தொப்பை வரை வளர்ந்துவிட்ட தாடியை ஆயாசத்தோடு நீவி விட்டுக் கொள்கிற போது மட்டும் கொஞ்சம் ஹ. ஹ!

லாரி டிரைவராய் இருந்த 'கலைஞன்' சிவாஜியை மேடைக்கு அறிமுகம் செய்து பெரிய பாடகனாக்கி, அவன் நிழலை யாசிக்கிற வித்தியாசமான பாத்திரம் சீதாவுக்கு. நன்றாகவே செய்திருக்கிறார்.

இந்தப் பட டைரக்டரின் சில கண்டு பிடிப்புகள்: 1. ஜலதோஷமும் தும்மலுமாய் இருந்தால் பாடத்தான் முடியாது; தய்யத் தக்கா என்று நன்றாகவே குதித்து ஆட முடியும். 2. ஒரு ஐயாயிரம் ரூபாய் தேவையென்றால் கல்கத்தாவுக்குச் சென்றால்தான் சம்பாதிக்க முடியும்.

சுறுசுறுப்பான பழைய 'டிராக்' படம்!

-ஜெய மன்மதன்



நீலகண்ட தீட்சிதர் தம் மனம் மலரைப் போல் மென்மையானதா அல்லது கல்லைப் போல் கடினமானதா என்று தமக்கே புரியவில்லை என்பதால் அம்பாளையே கேட்கிறார். தம் மனம் எவ்வாறு இருந்தாலும் அது அம்பாளுக்கே உரியது என்கிறார். தாமரை மலரைப் போல் மென்மையாக இருப்பின் தேவியின் கோமள சரணத்தில் சமர்ப்பிக்கிறாராம். கல் போல் கடினமாக இருந்தாலும் அதை விலக்க வேண்டாம்! மீனாட்சி சுந்தரேச்வரர் திருமணத்தில் அம்மி மிதிக்கும் கட்டத்தில் தம் மனசாகிய கல் மீது அம்பாள் பாதம் பதிய வேண்டுகிறார்.

ஸ்ரீ ஜெயராம சர்மா உரையில் கேட்டு

எழுதியவர்: பத்மா தேசிகன்

# நாயும் நரியும் சொன்ன கதை

“சண்பகம், அப்போ நான் பிரம்மச்சாரியாகவே இருக்க வேண்டியதுதான்'' என்ருன் செந்தில்.

'''உங்களாலே இந்தக் கொலைகாரனைப் பிடிக்க முடியல்லேன்னு, அப்படியே இருந்துடறது. நானும் கன்னியாகவே இருந்துட்டுப் போறேன்'' என்ருள் செண்பகம் கோபமாக.



எம்.பி.சுப்பிரமணியன்

''நானும் குன்னூர் மாரியம்மனை வேண்டிக்கொண்டுதான் இருக்கிறேன் சண்பகம். கொலைகாரனைப் பிடித்த பின்புதான் நம்ம

திருமணம் என்ற சபதம் போட்டு விட்டாயே! மாமா சாமா கவுண்டரை வேண்டிக்கொண்டு தான் இருக்கேன்'' என்றான்.

சண்பகத்திற்கு அத்தான் முறை செந்தில். இருவரும் ஒருவரை யொருவர் விரும்பினர். திருமணம் நடக்க வேண்டியதுதான். திடீரென்று சண்பகத்தின் சித்தப்பாவும், செந்திலுக்கு மாமாவுமான சாமா கவுண்டர் இறந்து போனார்.

இரண்டாண்டுகள் ஓடி விட்டன. சென்பகம் துடியாய்த் துடித்துக் கொண்டுதான் இருந்தாள். சென்ற ஆண்டு அவள் சிம்ஸ் பார்க் பக்கமே போகவில்லை. இந்த ஆண்டு என்னவோ அவள் மனம் குன்னூரையும் சிம்ஸ் பார்க்கையும் சுற்றி வந்தது. சித்திரை பிறந்து விட்டது. இன்னும் இரண்டு வாரத்தில் பூங்காவில் காய் கறி, பழ வகைகள் காட்சி நடக்கும்.

சிம்ஸ் பார்க் உள்ளே சென்றாள். மரங்களும், செடிகளும், மலர்களும் அசைந்தாடி அவளை வரவேற்பது போலத் தோன்றியது. சுற்றி வந்தாள். விழாக் கோலம் பூணத் தயாராக இருந்த பூங்கா அவளுக்கு முக்கியமான செய்தியையும் கூறக் காத்திருப்பது போலத் தோன்றியது. அங்கிருந்த சூழ்நிலை அவளுக்கு ஏதோ ஒரு நம்பிக்கையைக் கொடுத்தது.

குன்னூரில் இருக்க மனமில்லாமல் சென்ற ஆண்டு சத்தியமங்கலத்திலிருந்த அத்தை வீட்டுக்குப் போய் விட்டாள். இந்த ஆண்டு விழாவுக்குக் குன்னூரிலேயே இருக்கப் போவதாகச் செந்திலிடம் கூறியதும் அவனுக்கு வியப்பாக இருந்தது.

மேலப்ப கவுண்டர் தோட்டங்களிலிருந்து வந்த காய்கறி, பழ, மலர் வகைகள் பல இருந்தன. அவை ஒரு தனிப்பட்ட கவர்ச்சியுடன் பிரகாசித்தன. பார்ப்பவர்களை ஈர்த்தன. தோட்ட முதலாளிகளிடையேயும், வியாபாரிகளிடையேயும் அவருக்குப் பட்டரிகள்கிடைக்கும் என்றபேச்சுஇருந்தது. காய்கறி தேர்வுக் குழுவில் இருந்த திருமதி பிருந்தா ராஜன், ''ஒருசில காய்கறி வகைகள் ஏதோ சொல்வது போல எனக்குத் தோன்றுகிறது. என்ன என்றுதான் புரியவில்லை'' என்றார்.

சண்பகம் காதிலும் அது விழுந்தது. அவளே அதைப்புரிந்து கொண்டு பூங்காவைச் சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருந்தாள்.

மலர்கள் பக்கம் போனவர்களுக்கு மேலும் அதிசயம் காத்திருந்தது. அவள் சித்தப்பா தோட்டத்தில் செண்பகப்பூ நிறையப் பூக்கும். அவருக்கு செண்பகப்பூ என்றால் பிரியம். அதனாலேயே அவர் தன் அண்ணன் மகளுக்கு செண்பகம் என்று பெயர் சூட்டினார் என்பாள் அத்தை. அவளுக்கும் செண்பகப்பூ என்றால் கொள்ளை ஆசை. செண்பகப் பூ வாசனையுடன் அவளுக்குத் தன் சித்தப்பா உடல் வாடை வீசியது போலத் தோன்றியது. காய்கறிகள்வைத்திருந்த இடத்திற்கு வந்தாள். அவற்றைப் பார்த்துத் திடுக்கிட்டாள். செண்பகத்திற்கு ஒரே பரபரப்பு. இனம் புரியாத ஒரு மன உளைச்சல். செந்திலைத் தேடினாள். அங்கு அவன் இல்லை. பூங்காவை விட்டு வெளியே வந்தாள். அவள் தேடியவன் கிடைத்த திருப்தி. வேகமாக வந்து சப்-இன்ஸ்பெக்டர் செந்தில் முன் நின்றாள். அவளைக் கண்டு ஆச்சரியமும் சந்தோஷமும் கலந்த பார்வையில், ''என்ன சண்பகம்?'' என்றான் செந்தில்.

''கொஞ்சம் வாங்க உடனடியா!'' என்றாள் பரபரப்புடன்.

முண்டியடித்துக் கொண்டு கூட்டத்திற்குள் விரைந்தாள். பின்னால் ஓடினான் சப்-இன்ஸ்பெக்டர் செந்தில்.

காரெட் வைத்திருந்த இடத்திற்குப் போய்க் காரெட் கொத்துக்களைக் காண்பித்தாள். ''சித்தப்பா விரல்களைப்போல இல்லே; இதோ பார் உருளைக் கிழங்கு அவர் தாடை போல இல்லே....!''

செந்திலுக்கு ஒன்றும் புரியவில்லை; சண்பகத்திற்குச் சித்தப் பிரமையா? சாமா கவுண்டரை நினைத்து நினைத்துப் பார்த்ததெல்லாம் அவராகத் தோன்றுகிறதா!

போலீஸ் விசில்கள் ஒலமிட்டன. ''கவர்னர் வந்து விட்டார் போலிருக்கே!'' என்று கூறிக் கொண்டே ஓடினான் செந்தில்.

''ஸார், நீங்க இன்ஸ்பெக்டர் வர்கீஸ் தானே?''

''ஆமாம் அம்மா. வா, உட்கார்'' என்றார்.

''நீங்க துப்பறிந்த கொலை வழக்குகளைப் பற்றி அத்தான் சொல்லியிருக்கிறார். சரியான சமயத்திலேதான் நீங்க வந்தீங்க''என்றாள்.

''என்ன இங்கும் ஒரு கொலையா?'' என்றார் வர்கீஸ்.

''மேலப்ப கவுண்டர்பணக்காரர். சிங்கப்பூரிலிருந்து பணம் சம்பாதித்துக் கொண்டு வந்தவர். வண்டிசோலை, பெட்டட்டி, அரவேனு, கோத்தகிரி முதலிய இடங்களில் தோட்டங்கள் வாங்கினார். சித்தப்பா நிலத்தைச் சுற்றியுள்ள தோட்டங்களையும்

பல்பு ஃப்யூஸான எலக்ட்ரிக் பல்புகளைத் தூர எறிந்துவிடாமல் அதன் உள்ளே இருக்கும் டங்ஸ்டன் ஒயரை நீக்கி, கலர்த் தண்ணீரை நிரப்பிக் கட்டித் தொங்க விட்டால் பார்க்க அழகாக இருக்கும். நவராத்திரி கொலுவில் இந்த முறையைப் பின்பற்றலாம்!

—மஞ்சுதேவன்



# சமைத்து 4 மணி நேரங்கழித்துக்கூட மணம் கமழும் சூடான உணவை பரிமாற இக்ளூ ஹாட் பேக் இப்பொழுது உங்களுக்கு உதவுகிறது




**மறுபடியும் சூடவைக்கும் வேலையே இல்லை**

சாதமானாலும் சரி, குழம்பு, கறி வகைகளானாலும் சரி, சமையலை சீக்கிரமே முடித்து இக்ளூ ஹாட்பேக்கில் வைத்து மூடிவிடுங்கள். 4 மணி நேரம் கழித்து பரிமாறினாலும் உணவு சமைத்த சூட்டோடு, ருசியாகவும், சத்து மிக்கதாகவும் இருக்கும்.

**நேரமும் எரிபொருளும் மிச்சம்...**

ஏனெனில் உணவை மீண்டும் சூடாக்குவதை தவிர்க்கிறது. மேலும் உணவுச்சத்து இழப்பையும் இது தடுக்கிறது.

ஜெனரல் மர்ச்சன்ட்ஸ் கடைகளில் இக்ளூ ஹாட்பேக் பல சைஸ்களில் கிடைக்கும். இன்றே ஒரு இக்ளூ ஹாட்பேக் வாங்குங்கள். அதனால் பல விதத்திலும் லாபம். மேலும் அதிக ஓய்வு நேரம் கிடைக்கிறது

**இக்ளூ ஹாட்பேக்கின் திறமைக்கு ஒரு சான்று**

தொடர்ந்து இரண்டு மாதம் இந்த ஹாட் பேக்கை சோதித்து பார்த்து சென்னை கேடரிங் இன்ஸ்டிட்யூட் கீழ்க்கண்ட சான்றுரையை வழங்கியுள்ளது.

"இது உஷ்ணத்தை நன்கு பாதுகாக்கிறது. அதே சமயம் உணவில் ருசிக் குறைவு ஒன்றுமில்லை. 8 மணி நேரத்திற்கு பிறகு கூட உணவின் மணத்தில் ஒரு குறைவும் ஏற்படவில்லை... இப்பெட்டிகள் திறன் மிக்கவை!"

**IGLOO hotpack**

மேட்டூர் பியர்ட்ஸெல் லிமிடெட்டின்
தரமான தயாரிப்பு

OBM 4897 TM

# இதோ ஒரு ஹேர்-டை எளிதாக உபயோகிக்கக் கூடியது, நம்பமுடியாத குறைந்த விலையில்!

**கோ**த்ரெஜ் பவுடர் ஹேர் டை கான்ஸென்ட்ரேட் உங்களுக்காகவே விசேஷமான கலவை முறையில் தயாரிக்கப்படுகிறது.
இந்தியாவில் பவுடர் ஹேர் டை கான்ஸென்ட்ரேட் இது ஒன்றே. இது தானாகவே பரவுகிறது. ஆகவே நீங்கள் சிறிதளவே உபயோகித்தால் போதும்!
மிகமிக முக்கியம், நீங்கள் நம்பமுடியாத அளவுக்கு குறைவான விலையில் இது கிடைக்கிறது!



**கலப்பது சுலபம்**
இந்தப் பவுடரை சிறிதளவு நீருடன் கலக்கவும். உபயோகிப்பதற்கு இப்போது தயார்.



**உபயோகிப்பது சுலபம்**
இதை சிரமமின்றி இலேசாகத் தடவுங்கள். தானாகவே ஒரே சீராக, மென்மையாக முடிமீது பரவி விடுகிறது. உங்கள் கேசத்துக்கு இளமையான அழகுத் தோற்றத்தைத் தருகிறது!






இந்தியாவில் தானாகவே பரவும் பவுடர் ஹேர் டை. இது ஒன்றே.

Godrej
**பவுடர்**
**ஹேர்-டை**
**கான்ஸென்ட்ரேட்**

**தரமோ நீங்கள் நாடுவது விலையோ உங்களுக்குப் பிடித்தமானது.**

CASGS -168-203 TAM

வாங்கினார். தொழிற்சாலைகளைக் கட்டினார். பட்டம் பதவியில் மோகம் கொண்டவர். அவர் தோட்டத்துக் காய்கறி, பழங்களைக் காட்சியில் வைத்தார். பரிசு கிடைக்கவில்லை. சித்தப்பாவுக்குத்தான் பரிசுகள். மேலப்பனைக் கிண்டல் செய்வார் சித்தப்பா. சித்தப்பா தோட்டத்தின் பேரில் மேலப்பனுக்கு ஒரு கண். சித்தப்பாவிடம் கேட்டான். எவ்வளவு விலை கேட்டாலும் கொடுக்கிறேன் என்றான். சித்தப்பா மறுத்து விட்டார். சில ஆண்டுகளுக்கு முன் குன்னூரில் புயல் அடித்தது. எங்கும் வெள்ளம். சித்தப்பா தோட்டம் பாழாய்ப் போய்விட்டது. உதகைக்குக் காய்கறி கொண்டு போன லாரி கவிழ்ந்து சேதமேற்பட்டது. —தோட்டத்தைச் செப்பனிடப் பணம் தேவைப்பட்டது. முன்பே கடன் வாங்கி யிருந்தார். சித்தப்பாவுக்குக் கடன் கொடுத்தவனைக் கேஸ் போடத் தூண்டி டிக்ரியும் வாங்க உதவி செய்தான் மேலப்பன். எனக்குப் பரீட்சைக்குப் பணம் தேவைப்பட்டது. தெரிந்தவர்கள் யாரிடமும் பணம் இல்லை. மேலப்பன்தான் உதவிக்கு வந்தான். தோட்டத்தை அவனுக்கு விற்றுவிட வேண்டியது. சித்தப்பாவே குத்தகைக்காரனாக சுவாதீனம் வைத்துக் கொள்ள வேண்டியது. ஒரு வருடத்தில் பட்ட கடனை வட்டியுடன் கொடுத்து விட்டால் பத்திரம் ரத்தாகி விடும். இல்லாவிடில் விக்கிரயம் ஊர்ஜிதம்.

''வேறுவழியின்றி ஒப்புக்கொண்டுபத்திரம் எழுதிக் கொடுத்துப் பத்தாயிரம் வாங்கிக் கொண்டார். ஒரு வருடம் முடியு முன் பணத்தைத் தயார் செய்து விட்டார். கெடுவுக்குச் சுமார் பத்து நாட்களுக்கு முன் சித்தப்பா சாமா கவுண்டர் காணாமல் போய் விட்டார். இறந்து விட்டார் என்று வதந்தி. கோட நாடு போய்க் கடன் தொல்லை பொறுக்காமல் கீழே விழுந்து விட்டார் என்று பேச்சு. மேலப்பக் கவுண்டர் தோட்டத்தைச்சுவாதீனம் செய்து கொண்ட பின்புதான் சித்தப்பா கடன்பட்ட விவரமெல்லாம் எங்களுக்குத் தெரிய வந்தது. எனக்கென்னவோ சித்தப்பா கொலை செய்யப்பட்டார் என்றுதான் தோன்றுகிறது. அதுவும் மேலப்பன்தான் அதற்குக் காரணமாக இருந்திருப்பான். என்னை யாரும் நம்ப மாட்டேங்கறாங்க. பயம் வேறு. மேலப்பன் பணக்காரன். சரியான ருசு இல்லைதான். ஆனா இன்னிக்கு எனக்குத் துப்புக்கிடைச்ச மாதிரி தோணுது; வாங்க, நான் காட்டுகிறேன்'' என்று வர்கீஸை அழைத்துக் கொண்டு வேகமாகப் புறப்பட்டாள்.

அவள் கூறியதில் கோர்வை யில்லை. ஆனால் பெண்களுக்கு அபூர்வமான ஊக சக்தி உண்டு என்பது வர்கீஸுக்குத் தெரியும். அவளுடன் நடந்தார்.

விழா முடிவில் காய்கறிகள், பழங்கள், கிழங்கு வகைகள் ஏலம் விட்டார்கள்.

வர்கீஸ் முகத்தில் கண்ட புன்னகையைக் கண்டு சந்தோஷமடைந்தாள் செண்பகம். செந்தில் வர்கீஸிடம் ஓடிவந்து ஏதோ கூறினான். அதைக் கேட்டதும் வர்கீஸ் செண்பகம் இருந்த பக்கத்தைப் பார்த்து வெற்றி என்பதைக் குறிக்கத் தம் கட்டை விரலை உயர்த்தினார்.

சண்பகம் பூரித்துப் போனாள். செந்திலைப் பார்த்து நையாண்டி காட்டினாள். ஏலம் விடும்போது கூடவே வர்கீஸ் சொல்லியிருந்தபடி தான் குறிப்பிட்ட காய்கறிகள் ஏலத்திற்கு வரும்போது சைகை செய்தான். வர்த்தகர்கள் போல வந்திருந்த போலீஸ் அதிகாரிகள் அந்தக் காய்கறிகளை ஏலத்தில் எடுத்தார்கள்.

பெரிய பத்திரிகை நிறுவனத்தின் விடுதியில் தங்கியிருந்தார் வர்கீஸ். அவர் குறிப்பிட்டிருந்தபடி வாங்கப்பட்ட காய்கறிகள் அந்த விடுதிக்கு வந்து சேர்ந்தன.

அன்றிரவு செண்பகமும் செந்திலும் அந்த விடுதிக்கு வந்தனர்.

செண்பகம் காய்கறி, பழ வகைகளைப் பார்த்தாள். சிறிது ஆலோசனை செய்தாள். தரையில் விரித்திருந்த கம்பளத்தை நோக்கித் தன் கையில் எடுத்த சாக்குக் கட்டியால் தரையில் ஒருமனித உருவத்தை வரைந்தாள். உருவத்தின் பல உறுப்புகளாகக் காய்கறி, பழ வகைகளை வைத்தாள். எப்படி சாமா கவுண்டர் உடலில் இருந்த தனித் தன்மைகளை அவை பிரதிபலிக்கின்றன என்பதை விளக்கினாள். உருளைக் கிழங்கில் சாமா கவுண்டர் தாடைக் குழிகூடத் தென்பட்டது.

முகமாக வைத்த பப்பாளியில் அவர் முகத்தில் நெற்றியில் உள்ள மச்சம்



## கைரேகைப் பதிவு

கைவிரல் ரேகை அடையாளம் கொண்டு குற்றவாளிகளைக் கண்டு பிடிக்கும் முறையை முதன் முதலில் உபயோகப் படுத்தியது சென்னை போலீஸ் தான்!

1895—ம் ஆண்டு போலீஸ் இன்ஸ்பெக்டர் ஸ்ரீ ஈ. ஏ. சுப்பிரமணிய ஐயர் தான் இந்த விரல் பதிவு முறையைத் துவக்கினார்.

இன்று ஜப்பானில் கண்டு பிடிக்கப் பட்டுள்ள முறையால் விரல் பதிவுமூலம் குற்றவாளியின் இரத்த குரூப்பைக் கூடத் தீர்மானிக்க முடியுமாம்!

—விசிறி

ஆதாரம்: எஃப்.வி. அருள் கட்டுரை

இருந்தது. திராட்சையில் அவர் கண்கள் பளிச்சிட்டன. வாழைத் தண்டு அவரது நீண்ட கைகளை நினைவுபடுத்தின. முட்டை கோஸ் அவர் வயிறு போல் வடிந்து உருண்டிருந்தது. பிளம் அவர் மூக்கைப் போல் சிவந்து 'சிறிது நீண்டிருந்தது. மாதுளை முத்துக்கள் அவர் பல் போலச் சிவப்பு நிறம் பரவி நின்றது.

செந்திலும் வர்கீஸும் திக்பிரமை பிடித்து நின்றனர்.

செந்தில் தன் மாமா சாமா கவுண்டர் தோட்டத்தில் உள்ள காரெட் செடிகள் வளர்ந்த இடங்களைத் தோண்டி அங்கு எலும்புத் துண்டுகள் கிடைத்த விவரத்தைக் கூறினான்.

மறுநாள் காலை மேலப்பக் கவுண்டரை நேரில் பார்த்து, தனக்கு அவர் பேரிலுள்ள அபிமானத்தைக் கூறினார் வர்கீஸ். தனக்குத் தோட்டக் கலையில் உள்ள ஆர்வத்தைக் கூறினார். மேலப்பன் தோட்டத்தைத் தான் பார்க்க விரும்புவதாகச் சொன்னார். அன்று மாலை மேலப்பனைப் பாராட்ட ஒரு விருந்து ஏற்பாடு செய்திருப்பதாகவும் அவர் வருகை தந்து கௌரவிக்க வேண்டும் என்றும்கேட்டுக் கொண்டார். மேலப்பக் கவுண்டருக்குச் சந்தோஷம். பூரிப்பு.

சிறிது நேரத்துக்கெல்லாம் வர்கீஸையும் அவர் நண்பர்களையும் தோட்டத்தைக் காண அழைத்துச் சென்றான் மேலப்ப கவுண்டன். முன்பு சாமா கவுண்டருக்குச் சொந்தமான தோட்டம். தோட்டத்தினுள் நுழைந்ததுமே அதன் அழகிய அமைப்பையும், செழுமையையும் கண்டு வியந்தனர். மரங்கள், செடிகள், கொடிகள் புத்துணர்வுடன் காணப்பட்டன.

தோட்டத்தைப் பார்த்த பின் மாலை விருந்துக்கு மேலப்பனை அழைத்து விட்டுத் திரும்பினார் வர்கீஸ். வந்த அதிகாரிகளுக்கு சாமாகவுண்டர் கொலைசெய்யப்பட்ட அந்தத் தோட்டத்தில் அவர் உடம்பு எலும்புகள் பல புதைக்கப்பட்டிருக்க வேண்டும் என்ற ஐயம் தோன்றியது.

மாலை ஏழு மணிக்கு விருந்து ஆரம்பமாயிற்று. நகரப் பிரமுகர்கள், சிம்ஸ் பார்க் விழாவில் கலந்து கொண்டவர்கள், தேர்வுக் குழுவினர் எல்லோரும் அழைக்கப்பட்டிருந்தனர். முக்கிய விருந்தினர் மேலப்பன்தான்.

விருந்தோம்பலுக்குப் பின் எல்லோரையும் அந்தப் பங்களாவின் தோட்டத்திற்குள் அழைத்தார் வர்கீஸ். இரவு பத்து மணியாகி விட்டது.

எல்லோரும் விசாலமான புல் வெளிக்கு வந்தனர். நிலவு காய்ந்து கொண்டிருந்தது. ஒளியும் நிழலுமூடே ஓர் உருவம் படுத்திருந்தது தெரிந்தது. ஆங்காங்கு விளக்குகள் எரிந்து கொண்டிருந்தன. பலர் கீழே கிடந்த உருவத்தின் அருகில் நின்று பார்த்துக்கொண்டிருந்தனர். வர்கீஸ் மேலப்பனை அழைத்துக் கொண்டு போனார்.

வெண்மையான தலைப்பாகை, கோட்டு, பஞ்சகச்ச வேட்டி, செருப்பு, இவை மனித உருவமாக வைக்கப் பட்டிருந்தன. தலைப்பாகையை அடுத்து முகமாகப்பப்பாளி, காதுகளுக்குக்கோஸ்இலை, கண்களுக்குத்திராட்சை, தாடையாக உருளைக் கிழங்கு, கைகால்கள் வாழைக்காய், வாழைத் தண்டுகள், விரல்கள் காரெட், வயிறு முட்டைக்கோஸ்—இப்படி காய்கறிகள் பழங்களைக் கொண்டு அந்த உருவம் முழுமை பெற்றிருந்தது. கோட்டின் காலர் மடிப்பில் செண்பகப்பூ செருகப் பட்டிருந்தது. காரெட் கையில் ஒரு குடையும் இருந்தது. இதைக் கண்ட மேலப்பன் நடுங்கினான். சாமா கவுண்டர் உடல்தான் அது என்று பிரமை அவனுக்குத் தோன்றியது. ''சாமா கவுண்டன்!'' என்று அவன் வாய் முணு முணுத்தது.

அருகில் இருந்த சண்பகம், ''ஆமா, உன்னைப் பழிவாங்க வந்துட்டார். ஏன், இப்ப உன் வயித்திலேயே இருக்கிறார். நீ சாப்பிட்டகாய்கறி,பழம் எல்லாம் அவர் தானே?'' என்றாள்.

அதைக் கேட்ட வேலப்பன் அரண்டான். கைகால்கள் நடுங்கின. வயிற்றைப் பிடித்துக் கொண்டு ''ஐயோ! ஐயோ!'' என்று கத்தினான்.

''என்ன,என்ன?''என்று கேட்டுக்கொண்டு வந்தனர் பலர்.

''வயிறு வலிக்குதே, உடம்பெல்லாம் ஊசியால் குத்தினாப் போல வலிக்குதே!'' என்று கத்தினான். கீழே விழுந்து புரண்டான்.

''இப்படிக் கொல்லாதே. தாங்க முடியலே'' என்று அரற்றிக் கொண்டு எழுந்தான். வயிற்றைப் பிடித்துக் கொண்டே, ''இதோ வருகிறேன்'' என்று தோட்டத்தின் தெற்கு மூலையை நோக்கித் தள்ளாடி நடந்தான்.

மேலப்பன் திரும்பவில்லை. வர்கீஸ் மற்றும் ஒருசிலர் போய்ப் பார்த்தனர். மேலப்பனைக் காணவில்லை. குன்றின் ஓரத்திலிருந்த அந்த பங்களாவின் ஓரத்திற்குச் சென்று பார்த்தனர். மேலேயிருந்து கீழே உள்ள பாறை மேல் விழுந்து தன்னை மாய்த்துக் கொண்டு விட்டான் என்பது புரிந்தது.

காலம் ஓடிவிட்டது. இந்த நிகழ்ச்சியைப் பற்றி இப்போது பலருக்குத் தெரியாது. மேலப்பன் விழுந்த பள்ளத்தாக்கின் அருகில் உள்ள பெரியபள்ளம் கிராமத்தில் இப்பொழுதும் ஒரு நாட்டுப் பாடல் சிறுவர் சிறுமியர்களால் பாடப்பட்டு வருகிறது.

காயும் கனியும் சொன்ன கதை
செண்பகா கேட்ட கதை:
கொலையும் களவும் செய்துவிட்டு
குழிதோண்டி மறைத்திடினும்
வினைதான் வந்து முளைக்காதோ
விடுகதை பலவும் விள்ளாதோ!
நீலமலைக் கொடை பிடிக்க
பச்சைப் பசும் பொன்னாசனத்தில்
செம்மாந்து வீற்றிருக்கும், என் தாயே!
சுவை மிகுந்த காய் கனியும்
வண்ண வண்ண மலர்களையும்
தோற்றுவிக்கும் மாகாளியே!
நல்ல எண்ண மானிடரைப்
படைத்தருள்வாய் எந்தாயே!

# அறிமுகப்படுத்துகிறோம்!
# நீண்ட ஆராய்ச்சியின் விளைவாக உண்மையிலேயே செயலாற்றும் ஆயுர்வேத சரும களிம்பு!
# ஸான்டலின்-டி

மாசு மருக்களை நீக்கி, உங்கள் சருமத்தை மலரிதழ்போன்று வழவழப்புடனும், மிருதுவாகவும் ஆக்குகிறது.




இப்போது முதன்முறையாக
மூலிகைகளின் ஆற்றும் சக்திவாய்ந்த,
பரிசுத்தமான, இதமளிக்கும் சரும களிம்பு...
....மாசில்லாத மேனிக்கு மட்டுமல்லாமல்; உண்மையிலேயே
சருமத்திற்கும் புத்துயிரளித்து மென்மையாகவும், மழமழப்பாகவும் ஆக்கும் சக்தி வாய்ந்தது.

ஆயுர்வேத முறையில் உருவாக்கப்பட்ட ஸான்டலின்-டி வறண்ட சருமத்திற்கு மிகச் சிறந்த களிம்பு. மற்றும் கண்ணின் கீழே தோன்றும் கருவட்டங்கள், வெண்தேமல்கள், நெற்றியில் தோன்றும் கரும்புள்ளிகள், "அலர்ஜி"யால் விளையும் தடிப்புகள், அரிப்புகளுக்கும் ஏற்றது.

சருமத்தை பகட்டாகவும் பளபளப்பாகவும் இருக்க உதவும் ஸான்டலின்-டி, ஒரு "ஸ்கின்-கண்டிஷனர்" ஆகவும் செயலாற்றுகிறது. நீங்கள் இழந்த இயற்கையின் எண்ணெய் சத்துக்களை ஈடு செய்து உங்கள் சருமத்தை புதுப்பொலிவுடன் ஊட்டமுள்ளதாக்குகிறது. மேலும் இளமை குன்றாத செழிப்புடன், மாசுமறுவற்ற சருமத்தை அளிக்கிறது.

---

**ஸான்டலின்-டி மேன்மையான சரும பராமரிப்புக்கு மூலிகைகளின் சேர்க்கை கொண்ட ஆயுர்வேத அடிப்படையிலான ஆதாரவழி.**

---

இந்த தரமான தயாரிப்பை அளிப்பவர்கள் :

**பொருகா இண்டஸ்ட்ரீஸ் பிரைவேட் லிமிடெட்**

கன்ஸ்யூமர் பிராடக்ட்ஸ் டிவிஷன், 22-A, கதீட்ரல் ரோடு, சென்னை-600 086.
தொலைபேசி எண் : 83782

**இந்தியாவின் இணையற்ற முவ்வகையில் செயலாற்றும் "ஆயுர்சக்தி" –ஆயுர்வேத வலி நிவாரணி தயாரிப்பாளர்கள்.**

Interpub(M) 83

# வாசகர் போட்டி

மனிதருக்கு மனிதர் சுபாவம் வேறுபடுவது போல, எழுத்தாளருக்கு எழுத்தாளர் வர்ணனைகளும் வித்தியாசப்படும்.

இங்கே ஐந்து எழுத்தாளர்களின் வர்ணனைப் பகுதிகளைக் கொடுத்திருக்கிறோம். எல்லோருமே உங்களுக்கு நன்கு அறிமுகமான எழுத்தாளர்கள்தாம்.

அவர்கள்: சாண்டில்யன், சுஜாதா, புஷ்பா தங்கதுரை, இந்துமதி, சிவசங்கரி.

எந்த வர்ணனையை எந்த எழுத்தாளர் எழுதியிருப்பார் என்று நீங்கள் கண்டு பிடித்துக் கீழே வெளியாகியுள்ள கூப்பனில் விடைகளை எழுதி அனுப்ப வேண்டும்.

முற்றிலும் சரியான விடைக்குப் பரிசு ரூ. 300. ஒருவருக்கு மேல் சரியான விடை எழுதியிருந்தால், பரிசுத் தொகை பகிர்ந்தளிக்கப்படும். பத்துப் பேருக்கு மேல் சரியான விடை எழுதினால், குலுக்கல் முறை மூலம் பத்து அதிர்ஷ்டசாலிகள் தேர்ந்தெடுக்கப்பட்டு, பரிசு வழங்கப்படும்.

இதோ அந்த வர்ணனைகள்!

வர்ணனை 1: கதவு தானாக அடைத்துக் கொள்ள, தன் எதிரில் நிற்பது ஒரு கச்சிதமான இளசு என்பதை உணர்ந்தார். ஜீன்ஸ் போட்டிருந்தாள். தலையைப் பின்னால் தள்ளி, குதிரைவால் போட்டிருந்தாள். பெண்ணுக்குப் பதினாறு வயது. கண்கள் இரு துறுதுறு. மெல்லிய டிஷ்யூ துணி உடலை ஒட்டிப் பூசியிருந்தது....

வர்ணனை 2: முப்பத்துமூணு வயசுப் பெண் மணிதோன்றினாள். நெற்றியில் புருவங்கள் மத்தியில் பொட்டு இட்டிருந்தாள். தலை மயிரை விரல்களால் கோதிவிட்டுக்கொண்டிருந்தாள். கண்களில் சமீபத்திய சலனங்கள் சில தெரிந்தன. கருப்பு வட்டங்கள் தெரிந்தன. உதடுகள் மெதுவாக இருந்தன.

வர்ணனை 3: மொழு மொழுவென்று பூசின உடல் அமைப்பால் சற்றுத் தூக்கலாகவே தெரியும் தாழம்பூ நிறம். மையைப் பட்டையாகத் தீட்டித் தீட்டி மான் குட்டிக் கண்களாகப் படபடக்கும் விழிகள். சந்தனப் பேலாவைக் கவிழ்த்தது போன்ற மார்பகங்கள். தொடையை இடிக்கும் பின்னல்.

வர்ணனை 4: கருமையான பெரும் பாம்பு போல் அவள் முதுகில் புரண்டு இடைக்குச் சற்றுக் கீழே தடைப்பட்டு ஒரு பக்கமாக வளைந்து கிடந்த அவள் அழகிய பின்னலும், பின்னலுக்கு அகப்படாமல் கழுத்துப் பிரதேசத்தில் விலகி நின்று கழுத்தின் சிவப்பைச் சற்று அதிகமாக எடுத்துக் காட்டிய கேசப் பிரிவுகளும், பின்னழகு முன்னழகுக்குச் சிறிதும் குறைந்ததல்ல என்பதை நிரூபித்தது.

வர்ணனை 5: அப்பா கறுப்புதான். நல்ல கரிக் கறுப்பு. முகத்திலும்கூட அவ்வளவு லட்சணமில்லை. ஆனாலும் சிவப்புப் பட்டும் ருத்திராட்ச மாலையும் நெற்றி நிறைய விபூதியுமாக அவர் கோவிலுக்குள் நுழைகிறபோது நல்ல கம்பீரமாகத் தெரிவார்.

எந்த வர்ணனை யாருடையது?

| எண் | எழுத்தாளர் |
|---|---|
| 1 | |
| 2 | |
| 3 | |
| 4 | |
| 5 | |

என் பெயர்: ______________________

முகவரி: ______________________

______________________

______________________

______________________

______________________

முடிவு தேதி: 19–9–83

உறையின் மீது 'எந்த வர்ணனை யாருடையது?' என்று மறக்காமல் குறிப்பிடவும்.

# எந்த வர்ணனை யாருடையது?

# ஆலோசனை மன்னன்

முகுந்தன்

“ஆறு மாசத்துக்கு முன்னாலே எங்க முதலாளி என்னைக் கூப்பிட்டு, ''மாசா மாசம் செலவு அதிகமாகிக் கொண்டே வருது. அதைக் குறைக்கணும். ஏதாவது யோசனை சொல்லு' என்று கேட்டார்...''

''நீ என்ன யோசனை சொன்னே?''

''டெலிபோன் பில்லே முதல்லே குறைப்போம். ஆபீஸ் விஷயங்களைப் பேசறதை விட சொந்த விஷயம் பேசத்தான் நிறையப் பேர் ஆபீஸ் செலவில் 'கால்' போடறாங்க. அதனாலே, டெலிபோனை முதல்லே எடுங்கள்' என்று சொன்னேன்... 'நல்ல யோசனை தான்'னு அப்படியே செய்துட்டார்....''

''அது சரி, யாருக்காவது போன் பண்ணித் தகவல் ஏதாவது சொல்லணும்னா என்ன பண்ணுவீங்க?''

''நேரிலேயே போய் விஷயத்தைப் பேசிட்டு வந்துடுவோம். அதாவது உள்ளூராக இருந்தால்... வெளியூர்னா, லெட்டர் போடுவோம்...''

''அது சரி... எதிலே போவீங்க?''

''பஸ்ஸிலேதான். அவசரமாக இருந்தால் ஆட்டோ. மூணு, நாலு பேர் வெவ்வேறு இடங்களுக்குப் போக வேண்டியிருந்தால் டாக்ஸி வச்சுப்போம்.''

''இதுக்கெல்லாம் நிறையச் செலவாகுமே?''

''ஆகாமலிருக்குமா? ஒரு மாதத்துக்கெல்லாம் முதலாளி மறுபடி என்னைக் கூப்பிட்டு, 'என்னய்யா! ஆட்டோ, டாக்ஸி செலவு ஆளை அசத்துதே! இதுக்கு என்ன செய்யலாம்?' என்று கேட்டார்...''

''நீ என்ன சொன்னே?''

''இன்னொரு அருமையான அட்வைஸ் கொடுத்தேன். ஆபீஸ் உபயோகத்துக்கென்று ஒரு கார் வாங்கும்படி சொன்னேன். வாங்கிட்டார்.''

''ஆக, டாக்ஸி–ஆட்டோ பில் குறைஞ்சு தாக்கும்?''

''அது குறைஞ்சுது. ஆனா காருக்குச் செலவு பண்ணியாகணுமே! பெட்ரோல், ஆயில், டிரைவர் சம்பளம், அவனுக்கு ஓவர் டைம் அலவன்ஸ் – இப்படி வழக்கத்தை விடச் செலவு அதிகமாகவே ஆச்சு!''

''அதைக் குறைக்க முயற்சி எதுவும் பண்ணலையா?''

''பண்ணாமல் இருப்போமா? முதல் கட்டமா, கார் டிரைவருக்குச் சீட்டுக் கிழிச்சு அனுப்பினோம். நாங்களே கார் ஓட்டிக் கொண்டு போக ஆரம்பித்தோம்.''

''அதிலே ஏதாவது பிரச்னை வந்திருக்குமே!''

''வராமலிருக்குமா? நிறையவே வந்தது. எங்கள் மானேஜருக்கு டிரைவிங் தெரியும். ஆனால் அஸிஸ்டெண்ட் மானேஜருக்குத் தெரியாது. அதனாலே அஸிஸ்டெண்ட் மானேஜர் வெளியில போறபோதெல்லாம் மானேஜர் டிரைவ் பண்ண வேண்டியிருந்தது. 'இது என் சொந்த கௌரவத்தைப் பாதிக்கிற விஷயம். அதனாலே நான் டிரைவ் செய்ய மாட்டேன்'னு அவர் சொல்லிட்டார்.''

''அவர் சொன்னதும் நியாயமாகத்தான் படுது....''

'' 'இந்தப் பிரச்னையைத் தீர்க்க என்ன வழி' என்று முதலாளி என்னைக் கேட்டார், 'ரொம்ப சிம்பிள். அஸிஸ்டெண்ட் மானேஜருக்குப் பதவி உயர்வு கொடுத்து அவரையும் மானேஜராக ஆக்கி விடுங்கள். கௌரவப் பிரச்னை ஒழிஞ்சு போகும்'னு சொன்னேன்... அதே போலச் செய்துட்டார்!''

''வெரி குட்!''

''இது மாதிரியே கார் டிரைவிங் தெரிஞ்ச அத்தனை பேருக்கும் சட்டுச் சட்டுன்னு பிரமோஷன் கொடுத்து விட்டோம்.''

''எல்லோரும் ரொம்பச் சந்தோஷப் பட்டிருப்பாங்களே?''

''பின்னே? மானேஜர் பதவி கிடைக்கிறதுன்னா லேசா?''

''கார் ஓட்டும் பிரச்னையை ஒரு வழியாகத் தீர்த்துட்டீங்க!''

''ஆமாம்... ஆனால் புதிதாக வேறொரு பிரச்னை எழுந்தது....''

''என்ன பிரச்னை?''

''அட்டெண்டர், வாட்டர் பாய், கிளார்க், டைப்பிஸ்ட், வாட்ச்மேன் – எல்லாருமே மானேஜராக ஆகிவிட்டதனாலே பழைய வேலைகளைச் செய்ய மாட்டோம்னு அவங்க சொல்லிட்டாங்க. மானேஜர்னு பேரை வச்சுக்கிட்டு, பிளாஸ்கைத் தூக்கிக்



இட்டு, ஹோட்டலுக்குப் போய்க் காப்பி, டிபன் வாங்கி வர்றதுக்கும், வாசல்லே காக்கி யூனிஃபார்ம்'லே கால் கடுக்க நின்னு வர்றவங்களுக்கு குட்மார்னிங் சொல்ற துக்கும் கூச்சமா இருக்குதுன்னு சொன்



னாங்க... திரும்பவும் கௌரவப் பிரச்னை...! அதனாலே முதலாளி வழக்கம் போல என்னைக் கூப்பிட்டு யோசனை கேட்டார்.''

''உன்னையா? மறுபடியுமா?''

''என்னை விட்டால் வேற எவனுக்கய்யா புதுசு புதுசா ஐடியா வரும்? அதனாலேதான் என்னைக் கேட்டார். 'அவங்க சொல்றதும் நியாயமாகத்தான் படுது... ஆனா இனிமேல இவங்களோட பழைய வேலைகளைச் செய்யப் புதுசா ஆட்களைப் போட்டுடுங்கன்னு சொன்னேன்.... முதலாளியும் அப்படியே செய்துட்டார்.''

''இன்னொரு பிரச்னையைத் தீர்த்துட்டே!''

''தீர்க்காமலிருப்பேனா? ஆனால் உடனே பற்றுக்குறைப் பிரச்னை எழுந்தது....''

''பற்றுக்குறையா?''





''ஆமாம். முன்னே பத்துப் பேர் வேலை பார்த்த இடத்திலே இப்போ இருபது பேராச்சே! மேஜை, நாற்காலியிலிருந்து குண்டூசி மெத்தை வரை எல்லாத்துக்குமே தட்டுப்பாடு..ஒரு மேஜையிலே எதிரும் புதிருமாக ரெண்டு பேர் வேணா உட்காரலாம். ஒரு நாற்காலியிலே ரெண்டு பேர் உட்கார முடியுமா? அதனால் முதலாளி ஒரு நல்ல முடிவு எடுத்தார்.''

''உன் கிட்டே ஆலோசனை கேட்டுத் தானே?''

''ஆமாய்யா ஆமாம்!... அந்த முடிவு என்ன தெரியுமா? காலை எட்டு மணியிலிருந்து ஒரு மணி வரைக்கும் ஒரு குரூப் வேலை செய்யும். ஒரு மணியிலிருந்து

சாயந்திரம் ஆறு மணி வரைக்கும் இன்னொரு குரூப்!''

''அதாவது 'ஷிப்ட்' முறை?''

''அதுவேதான்... இந்த மாற்றத்தினாலே வேலை நல்லா நடந்தது. ஆனால் ஆபீஸ் காருக்குத்தான் டிமாண்ட் அதிகமாப் போயிடுத்து. அதனாலே இன்னொரு கார் வாங்கினோம்....''

''செலவுகள் எக்கச் சக்கமாக ஏறிப் போயிருக்குமே?''

''ஏறித்தான் போச்சு! முதலாளி என்னைக் கூப்பிட்டு, 'உன் யோசனையைக் கேட்டுக் கேட்டு ஒவ்வொரு காரியத்தையும் செய்தேனே... இப்போ இவ்வளவு செலவாகுதே. எனக்கு பிளட் பிரஷர் தலைக்கு ஏறுதே... இதுக்கு என்ன சொல்றே?'ன்னு சத்தம் போட்டார். ஆலோசனைதான் கேட்கிறார்னு புரிஞ்சுக்கிட்டேன்...''

''மறுபடியும்? உங்கிட்டே? ஆலோசனை?''

''ஆமாம், ஆமாம், ஆமாம்!... நான் ஒரு அருமையான யோசனை சொன்னேன். அவருக்கும் பிரச்னை தீர்ந்தது, பிரஷர் குறைஞ்சது.''

''என்னப்பா அப்படிப்பட்ட அபாரமான யோசனை?''

'''கம்பெனியை என் பொறுப்பிலே விடுங்க. நீங்க போய் மெடிட்டேஷன் கத்துக்குங்க'ன்னு சொன்னேன். அவரும் தீவிரமா டி. எம். பயிற்சி செய்து, டென்ஷன் குறைஞ்சு, இப்போ ஆபீஸ் பக்கமே வராமல் ரொம்ப நிம்மதியா இருக்கார்!''

''உனக்குத்தான் இப்போ தலைக்கு மேலே ஏகப்பட்ட பிரச்னை இருக்கும்...''

''அதுதானே இல்லே... கம்பெனி என் பொறுப்பிலே வந்தவுடனே ஒரு பியூனையும் ஒரு கிளார்க்கையும் மட்டும் வச்சுக்கிட்டு மத்தவங்க அத்தனை பேரையும் வீட்டுக்கு அனுப்பினேன்... டெலிபோன் கனெக்ஷனுக்கும் எழுதிப் போட்டு வாங்கிட்டேன்... பிஸினஸ் இப்போ நல்லா நடக்குது... அதுவும் குறைஞ்ச செலவிலே!''

''ஆமாம், இதையெல்லாம் எதுக்காக என்கிட்டே வந்து சொல்றே?''

'' 'உழைப்பால் உயர்ந்தவர்கள்'னு உங்க பத்திரிகையிலே ஒரு கட்டுரைத் தொடர் வெளியிடறீங்களே — அதிலே என்னைப் பத்தியும் நீங்க எழுதணும்னுதான்...''

''அது இருக்கட்டும்... உங்க முதலாளியோட அட்ரஸைக் கொடு... அவரை நான் சந்திச்சாகணும்...''

''எதுக்கு சார்? என்னைப் பத்தி அவர்கிட்டே கேட்கவா?''

''இல்லேப்பா... 'ஆலோசனையால் கெட்டவர்கள்'னு ஒரு புதுப் பகுதி ஆரம்பிக்கலாம்னு இருக்கோம்... அது விஷயமா அவரைப் பேட்டி காணலாம்னுதான்!''



ஆயிரக்கணக்கான குடும்பங்கள் காலங்காலமாக
பயன்பட்டுவரும் கிராம்புத் தைலத்தின்
நன்மைகளை ப்ராமிஸில் கண்டுணர்ந்தனர்.
கிராம்புத் தைலம் கொண்ட
இணையற்ற டூத்பேஸ்ட்
ப்ராமிஸ்
நீங்களும் ஏன் அதை உபயோகிக்கக்கூடாது?
அட! ப்ராமிஸ் போல டூத்பேஸ்ட்டை ஏன் இதுவரைக்கும் யாரும் தயாரிக்கல!
ப்ராமிஸ்
பற்சிதைவிலிருந்து பாதுகாக்கிறது.
வாய்க்குப் புத்துணர்ச்சி
தருகிறது மற்றும்
துர்நாற்றத்தை அகற்றுகிறது.
Promise
The unique toothpaste with time-tested CLOVE OIL
for healthier teeth and gums, fresher breath
பல்ஸாரா தயாரிப்பு
ஆரோக்கியமான பற்கள்,
ஈறுகள் மற்றும் புத்துணர்ச்சிமிக்க
மூச்சுக்கு ப்ராமிஸ்.
CHAITRA-BLS-453-R TAM



# வெற்றியைக் கண்டு பயப்படுகிறேன்

அண்மைக் காலமாகப் பாக்யராஜ் படங்களுக்கு ஏற்பட்டிருக்கும் அமோக வரவேற்பு பிரமிக்க வைக்கும் ஒன்றாகும். எல்லாத் தரப்பு ரசிகர்களையும் திருப்திப்படுத்தும் வகையில் அவரது படங்கள் அமைந்து வெற்றி மேல் வெற்றியாகக் குவிந்து வருகின்றன. இதற்குக் காரணம் என்ன? பாக்யராஜே கூறுகிறார்:

ஒரு திரைப்படத்துக்கான கதை என்று எடுத்துக் கொண்டால் நான் அதில் முக்கியமாக ஒரே ஓர் அம்சத்தைத்தான் பார்ப்பேன். அந்தக் கதையில் குறைந்தபட்சம் 30 பர்சென்ட் ரியலிசமாவது இருக்க வேண்டும். அதற்கு மேல் எவ்வளவு இருந்தாலும் அவ்வளவுக்கவ்வளவு நல்லது. இந்த 30 பர்சென்ட் ரியலிஸத்துடன் தேவையான கற்பனையைக் கலந்தால் போதும். இதுவே என் ஃபார்முலா.

சின்ன வயசிலிருந்தே நிறையப் படங்கள் பார்ப்பேன். சாதாரணக் கண்ணோட்டத்துடன் அல்லாமல், கொஞ்சம் 'கிரிட்டிக்கலாக'வே பார்ப்பேன். திரைப் படம் ஓடும் போதே 'இந்த சீனுக்குப் பிறகு இந்த சீன் வரும்' என்று நான் கற்பனை செய்வேன். அதே போலக் காட்சிகள் தொடரும். நான் படம் எடுக்க ஆரம்பித்ததும் இந்த அனுபவம் எனக்குக் கை கொடுத்தது. நம்மைப் போலவே எத்தனை ஆயிரம் பேர் இருக்கிறார்கள்! அவர்களும் நம் படத்தில் இதற்குப் பிறகு இதுதான் வரும் என்று கற்பனை செய்து அதே மாதிரி படமும் அமைந்து விட்டால் அவர்களுக்கு அலுப்புத் தட்டுமல்லவா? எனவே, புதிதாக ஏதாவது சொல்ல வேண்டும், செய்ய வேண்டும் என்று தீர்மானித்தேன்.

ஆனால் ஒரு கதாசிரியன் தான் அனுபவப்பட்டதையோ, படித்ததையோ அல்லது கேட்டதையோதானே கதையில் புகுத்த முடியும்? உண்மையைச் சொல்லப் போனால் நான் நாவல்கள் நிறையப் படித்ததில்லை. மிடில்கிளாஸ் லெவலில்தான் எனக்குப் பழக்கம் அதிகம். ஆகவே, என் கதைகள் பெரும்பாலும் நடுத்தர வர்க்கத்தைப்பற்றியதாகத்தான் இருக்கும்.

ஒரு விஷயம் என்னை மிகவும் பாதித்தது. பெண்களின் திருமண விஷயம்தான். நம் குடும்பங்களில் பெண் பார்ப்பது என்பது முக்கியமான, தவிர்க்க முடியாத ஒரு சடங்கு. பெண்ணைப் பார்க்க ஒருவன் வருகிறான் என்று வைத்துக் கொள்ளுங்கள். அவனைப் பொறுத்த வரையிலும் எப்படியோ — ஆனால் அந்தப் பெண்ணுக்கு அதுவே முதல் அனுபவமானால் மனத்திலே என்னென்னவோ உணர்ச்சிகள் பொங்கும். அந்த 'மாப்பிள்ளை' பார்ப்பதற்குக் கொஞ்சம் லட்சணமாகவும் இருந்து, அந்தப் பெண்ணுக்குப் பிடித்து விட்டதென்றால், அவன் உருவம் அவளது மனத்தில் ஆழப் பதிந்து விடுகிறது. 'இவரே நம் கணவராக அமைய வேண்டும்' என்று வேண்டிக்கொள்வாள். அமைந்துவிட்டால் நல்லதுதான். அப்படி அமையவில்லையென்றால் அந்தப் பெண்ணுக்கு அது எத்தனை பெரிய அதிர்ச்சி!... அடுத்தபடி, இன்னொருவன் பெண் பார்க்க வருகிறான். அந்தப் பெண



முதலில் மனத்தில் எழுதியிருந்த சித்திரத்தை அழித்துவிட்டு இவன் உருவை எழுதிக் கொள்கிறாள்... 'இவர் நமக்குக் கணவராக வாய்த்தால் நல்லது' என்று மறுபடி நினைக்கிறாள்.... இது தொடர்கிறது. இப்படி அழித்து அழித்து எழுதி அலுத்துப் போக, பிறகு கடைசியாக ஒருவன் வந்து சேர்கிறான். அவனுக்கும் அவளுக்கும் திருமணம் நிச்சயமாகி நடக்கிறது.

திருமணமாகி விட்டது. இனி கணவன் தான் அவளுக்குச் சகலமும். இருந்தாலும் அவளைக் கவர்ந்தவனது நினைவு முகம் நெஞ்சில் அழியாமலே இருக்கும். எல்லாம் எது வரையில்? முதலிரவு வரையில்தான். மறக்க முடியாத அந்த இரவில் தன்னை முழுவதுமாக ஒப்படைத்த பிறகு, கணவனின் நினைவை மட்டும் வைத்துக் கொண்டு, பழசையெல்லாம் மனத்திலிருந்து அகற்றிவிடுவாள் அந்தப் பெண்.

சில பெண்களைப் பொறுத்தமட்டிலும் இது சாத்தியமாவதில்லை. அதுவும் ஏற்கெனவே அந்தப் பெண் ஒருவனைக் காதலித்திருந்து, அந்தக் காதல் கைகூடாமற் போய், வேறு இடத்தில் அவளுக்குத் திருமணம் ஆகிவிட்டதென்றால் சொல்லவே வேண்டியதில்லை. மனம் கவர்ந்தவனின் நினைவும் அழியாமல், கணவனுடன் இணக்கமாக இருக்க வேண்டிய சூழ்நிலை உருவாகும். சிலரால் இதைத் தாங்கிக் கொள்ள முடியாமல் தற்கொலைகூடச் செய்து கொள்கிறார்கள். கணவனிடம் தன் பழைய வாழ்க்கையைச் சொன்னால் என்ன விபரீதம் விளையுமோ என்ற அச்சம் பெரும்பாலான பெண்களுக்கு ஏற்படுவது இயல்புதான். அதனாலேயே தங்களது மன உணர்ச்சிகளை அடக்கியாளப் பார்க்கிறார்கள். ஒருவித டென்ஷனிலேயே வாழ்க்கையை நடத்துகிறார்கள்.

அபூர்வமாக ஒரு பெண் தன் கணவனிடம் தனது காதலைப் பற்றிச் சொன்னாளென்றால் என்னவாகும்? இந்த எண்ணம்தான் 'அந்த 7 நாட்கள்' கதைக்கு வித்து. முடிச்சு — எப்படி வேண்டுமானாலும் வைத்துக் கொள்ளலாம். அந்தக் கணவனும் மற்ற? சராசரி கணவன்மார்களைப் போல் சந்தேகப் பிராணியாகவோ, கொதித்தெழுந்து கோபப்படக் கூடியவனாகவோ இல்லாமல், மனைவியின் மனக் கஷ்டத்தைப் புரிந்து கொண்டு பரிவுடன் செயல்படக் கூடியவனாகவோ அமைந்து விட்டால்...? இதற்கு முன்னுதாரணம் ஒன்றும் எனக்குக் கிடைத்தது. பிரபல நகைச்சுவை நடிகர் சந்திரபாபுவின் வாழ்க்கையில் ஏறக் குறைய இதே போன்றதொரு சம்பவம் நிகழ்ந்ததாகவும், சந்திரபாபு கொஞ்சம் கூட மனம் கலங்காமலும் தயக்கம் காட்டாமலும், தாமே முன்வந்து தமது மனைவியைக் காதலனுடன் இணைத்து வைத்ததாகவும் நான் கேள்விப்பட்டிருந்தேன். எவ்வளவு உயரிய செயல்! இதைத்தான் என் கதையில் அந்த டாக்டர் கதாபாத்திரம் செய்ய முன்வந்தார். ஆனால்... அந்தப் படத்தின் முடிவு என்னவென்றுதான் உங்களுக்குத் தெரியுமே!

இதே போல, பெண் பார்க்க வரும் நிகழ்ச்சியிலிருந்தே கதையைத் துவக்கியிருந்தேன் 'தூறல் நின்னுபோச்சு' படத்திலும். முதல் முதலாக அந்தக் கிராமத்துப் பெண்ணைப் 'பார்க்க' வருகிறான் அந்த இளைஞன். அவளுக்கு அவனை ரொம்பவும் பிடித்துப் போய் விடுகிறது. 'இவரே என் கணவராக அமைய வேண்டும் பிள்ளையாரப்பா' என்று வேண்டிக்கொள்கிறாள். அந்தக் கதாநாயகனுக்கும் அவளையே மணக்க வேண்டும் என்ற ஆசை எழுகிறது. இடையிலே வேறு சில பிரச்னைகள்... இப்படி, கதையை அமைத்திருந்தேன்.

'மௌன கீதங்கள்' படத்தைப் பொறுத்த வரையில், எல்லாப் பெண்களின் ஆதாரமான 'பொஸஸிவ்னெஸ்' ஸைத்தான் அடிப்படையாக வைத்தேன். ஒருத்தி பக்கத்து வீட்டுக்காரியுடன் உயிருக்குயிராகப் பழகுவாள்; ஆனால் தன் கணவனின் கவனம் யதேச்சையாக அந்தப் பக்கத்து வீட்டுக்காரியின்மீது படிந்தால் கூடப் போதும்; அந்தக் கணமே இவள் பட்டியலில் அவள் விரோதியாகி விடுவாள்! 'மௌன கீதங்கள்' கதாநாயகி அப்படிப்பட்ட 'டைப்'. இதுவும் 30 பர்சென்ட் ரியலிஸம்தான்.

'மௌன கீதங்கள்' வெற்றிகரமாக ஓடிக்கொண்டிருக்கும்போதே, 'விடியும்வரை காத்திரு' ரிலீஸ் ஆயிற்று. அதில் மனைவியைக் கொல்வதற்கு எப்போது சந்தர்ப்பம் கிடைக்

''ஆனாலும் அந்த ஆளுக்குத் திமிர் அதிகம்.''
''ஏன்?என்ன நடந்தது?''
''ஒரு ரூபாய்க்குச் சில்லறை இருக்கான்னான். இல்லேன்னேன். எட்டணாவுக்கு இருக்கான்னான். ஊஹூம்னேன். முப்பது பைசாவுக்கு மூணு பத்துப் பைசாவா இருக்கான்னான். இல்லேன்னேன். அப்புறம் கடைசியா எவ்வளவுக்குத்தான் இருக்குன்னு கேட்டான்.''
''என்ன சொன்னீங்க?''
''எல்லாம் பத்து ரூபாயாத்தான் இருக்குன்னேன்.''
''அதுக்குஅவன்என்ன சொன்னான்?''
''நீ பஸ் ஏறி வீடு போய்ச் சேர்ந்தா மாதிரிதான்னுட்டுப் போறான்!''
—ஆனந்தி ஹரி



கும் என்று காத்திருக்கும் கேரக்டர் எனக்கு. 'மௌன கீதங்க'ளில் என்னடாவென்றால் மனைவிக்காக உருகும் ரோல்; இங்கே இப்படி. ரசிகர்கள் இந்த ரோலை நான் செய்வதை ஏற்றுக்கொள்ள மறுத்து விட்டார்கள். ''அது பாக்யராஜ் செய்திருக்க மாட்டார். வேறு யாரோ செய்து அவர் பெயரிலே வெளியிட்டிருக்கிறார்கள்'' என்று கோபிச் செட்டி பாளையத்தில் இரண்டு பெண் மணிகள் 'விடியும்வரை காத்திரு' படத்தைப் பார்த்துவிட்டுப் பேசிக் கொண்டேபோனதை நான் என் காதால் கேட்டேன்.

'டார்லிங்...டார்லிங்...டார்லிங்' படம், என் வழக்கத்துக்கு மாறுபட்ட முறையில் நான் கதையமைத்த படம். அதாவது, காமிராமேனாக அசோக்குமார் என்று முதலிலேயே தீர்மானித்து விட்டோம். எனவே, இயற்கைக் காட்சிகள் நிறைந்த ஓர் இடத்தில் கதை நடப்பதாகத்தான் காட்டியாக வேண்டும். ஸோ, ஹில் ஸ்டேஷன். அந்தச் சூழ்நிலைக்கும், பணக்காரத் தன்மைக்கும் ஏற்ற வகையில் பணக்காரக் கதாநாயகி. இப்படி ஆரம்பித்துக் 'கதை'யை உருவாக்கினேன்.

அந்தப் படத்தில் கிளைமாக்ஸ் காட்சி பலரையும் கவர்ந்தது. விமரிசனங்களிலெல்லாம் கூட அதைக் குறிப்பிட்டிருந்தார்கள். சொன்னால் நம்ப மாட்டீர்கள் — அது யதேச்சையாகத் தோன்றிய ஒரு ஐடியா.

கதையைத் தீர்மானித்து முடித்தபோது நான் வைத்திருந்த கிளைமாக்ஸே வேறு. ஹீரோ மலை உச்சி மீது வேகமாக ஏறுகிறான். அங்கிருந்து குதித்து விடுகிறான். அவனைப் பின்தொடர்ந்து வரும் ஹீரோயின் பதற்றத்துடன் மலையுச்சிக்கு வந்து எட்டிப் பார்க்கிறாள்.... வியப்பால் அவள் விழிகள் விரிகின்றன.. முகத்தில் மெள்ள மெள்ளச் சிரிப்பு பரவுகிறது. அப்புறம்தான் காமிராவும் எட்டிப் பார்க்கிறது. ஹீரோ குதித்த இடத்துக்கு நேர் கீழே ஒரு பெரிய மரம். அதில் குப்புற விழுந்து உயிரோடு தொங்குகிறான் ஹீரோ! இப்படித்தான் நான் தீர்மானித்திருந்தேன்.

லொகேஷனுக்கு அலைந்தபோது, இம்மாதிரி ஒரு பள்ளத்தாக்கும் மரமும் எங்களுக்குக் கிடைக்கவில்லை. ஒரே ஒரு லொகேஷனில் ஒரு மரம் இருந்தது. ஆனால் அதில் குதித்தால், சிறிது தவறினாலும் நானோ, 'டூப்'போ பாதாளத்தில் போய் விழ வேண்டியது தான். எனவே மரத்தில் விழும் ஐடியாவை ஒதுக்கி விட்டு, கிளைமாக்ஸைப் படமாக்க முனைந்தேன்.

பாதி ஷூட் பண்ணிக் கொண்டிருக்கும் போது, ஹீரோ மலையுச்சிக்குப் போன பிறகு அங்கே ஒரு சமவெளி இருந்தால் எப்படி இருக்கும் என்று எனக்கு, நானே கேட்டுக் கொண்டேன். அந்தக் கணமே அந்த ஐடியா எனக்குப் பிடித்து போய் விட்டது. மலையுச்சி ஏறும்வரை சில ஷாட்டுகள்எடுத்தேன். அதன் பிறகு வேறொரு ரோட் பக்கம் சென்று வாகனங்களும், மனிதர்களும் (எல்லாம் யூனிட் ஆட்கள்தான்) நடமாடுவதை எடுத்தேன். இரண்டையும் மேட்ச் செய்யச் சில ஷாட்கள்... கிளைமாக்ஸ் ஓவர். யூனிட்டில் இருந்தவர்களுக்கு இந்த ஐடியா மிகவும் பிடித்துப் போய் விட்டது. ஆனால் வெளியில் யாரிடமும் சொல்ல வேண்டாம் என எச்சரிக்கை செய்து வைத்தேன். வேறு யாராவது இதே போல ஒரு காட்சியைத் தங்கள் படத்தில் சேர்த்து விட்டால்? படம் ரீ-ரிகார்டிங்கின் போதுகூட நான் மலையுச்சி ஏறும்வரையில் ம்யூஸிக் போட்டால் போதும் என்று சொல்லி விட்டேன். ம்யூஸிக் ட்ரூப்காரர்களுக்கு ஒரே ஸஸ்பென்ஸ். ம்யூஸிக் டைரக்டர் என்னிடம் வந்து ரொம்பவும் நச்சரித்தார். பிறகு எடிட் செய்திருந்த பிலிமைக் கையிலே தூக்கி கிளைமாக்ஸின் கடைசி ஷாட் என்ன வென்று தெரிந்து கொண்டார்.

'முந்தானை முடிச்சு' இப்போது சூடாக ஓடிக் கொண்டிருக்கும் படம்: அதிலேயும் ஒரு சின்ன 'ஐடியா'வைத்தான் வைத்து, கதையை அமைத்திருக்கிறேன். வயசுப்பெண் ஒருத்தி தன்னை ஒருவன் கெடுத்துவிட்டதாக அபாண்டமாகக் குற்றம் சாட்டினால் அதன் விளைவு எப்படியெல்லாம் இருக்கும்? யாராவது அப்படிச் செய்வார்களா? ஒருத்தி துணிந்து செய்கிறாள் என்றால், அவளது 'மோடிவ்' என்னவாக இருக்கும்? அவள் யார்மீது குற்றம் சாட்டுகிறாளோ அவனை இதுபோல் வற்புறுத்தி மணக்க வேண்டும் என்பதுதானே? ஆனால் அவனோ இவளை மணக்க முன்வரமாட்டேன் என்கிறான். ஏன்? அவனுக்கு ஒரு சின்ன முன் கதை இருக்கிறது.



**பஸ்களுக்கும் புனைபெயராமே!**

எழுத்தாளர்கள்தான் புனைபெயர் வைத்துக் கொள்ள வேண்டுமா என்ன? நெல்லிக்குப்பத்துக்கும் கடலூருக்கும் இடையே ஓடும் டவுன் பஸ்கள் ஒவ்வொன்றும் பாயும் புலி, மயில், மின்னல், புயல், தென்றல் — இப்படி வித விதமான புனை பெயர்களைச் சூட்டிக் கொண்டிருக்கின்றன. (ஒரிஜினல் பெயர்கள் வேறு உண்டு.) எனவே, எங்களூரில் யாரேனும் ''நான் தென்றலில் கடலூர் போய் புயலில் நெல்லிக் குப்பம் திரும்பினேன்'' என்று பேசிக் கொண்டிருந்தால் அவர்களைத் தவறாகப் புரிந்து கொள்ளக் கூடாது!

—ரா. ஜோதிராமன்

சரி... இந்தப் பெண் இப்படிப் பொய் சொல்லி அவனை மணந்து கொண்டுவிட்டான். அவனுக்குக் கோபம் வராமலிருக்குமா? 'என்னை மோசம் செய்த உனக்கு மண வாழ்க்கையின் சுகம் கிடைக்காமல் செய்கிறேன் பார்' என்று வீம்பு காட்டுகிறான். இது ஒரு சுவையான மோதலாக உருவெடுக்கிறது.

இந்தப் படத்தில் வரும் முருங்கைக்காய் சமாசாரம் இப்போது பரவலாகப் பேசப்படுகிறது. 'ஆபாசம்' என்றுகூடச் சிலர் அதைச் சொல்கிறார்கள். நான் ஒப்புக்கொள்ள மாட்டேன். நம் ஊரில் திருமணமான பிறகு மாப்பிள்ளை — பெண்ணுக்கு விருந்தில் முருங்கைக்காய் சாம்பார் வைத்துப் போடுவதில்லையா? இரண்டும் கெட்டான் வயசுப் பிள்ளைகளை ''முருங்கைக்காய் ரொம்பச் சாப்பிடாதே... உடம்புக்கு ஆகாது'' என்று ஏதோ ஒரு காரணத்தைச் சொல்லி விட்டுப் பெரியவர்கள் அடக்குவதை நானே பார்த்திருக்கிறேன். முருங்கைக்காய்க்குத் தனியே ஒரு மகத்துவம் இருக்கிறது என்பது எல்லோராலும் ஒப்புக்கொள்ளப்பட்ட ஒரு விஷயம்தானே? அதை என் படத்தில் கதைப் போக்கோடு இணைத்துச் சொல்லி யிருக்கிறேன். அவ்வளவுதான். நான் என்ன, கவர்ச்சி நடனமா காட்டி யிருக்கிறேன்?... கவர்ச்சியாகவோ, ஆபாசமாகவோ காட்சிகளை எடுக்க வேண்டுமென்றால் கதாநாயகி குனிந்து குனிந்து அரிசியோ நெல்லோ அளந்து போடுகிற மாதிரி வைத்து எடுக்கத் தெரியாதா எனக்கு? நான் அப்படி யெல்லாம் 'சீப்'பாகச் செய்யக் கூடியவனே அல்ல.

நான் படங்களின் மூலம் எதையும் பெரிதாகச் சாதித்து விட்டதாகச் சொல்லவில்லை. ஏதோ எனக்குத் தெரிந்த சில விஷயங்களை எனக்குத் தெரிந்த விதத்தில் படமாக எடுத்து வருகிறேன். என் கதைகள் பொதுவாக நான் ஆரம்பத்தில் சொன்னது போல மிடில் கிளாஸ் நோக்கிலேயே அமைந்திருக்கும். அதற்குக் காரணம் மிடில் கிளாஸ் வர்க்கம் ஒன்றிலேதான் மேல் மட்டத்தையும் பார்க்க முடியும்; கீழ் மட்டத்தையும் காண முடியும்.

எனது படங்களின் வெற்றி எனக்கு ஓரளவு பயத்தையே கொடுத்திருக்கிறது... படம் நன்றாக ஓடுவது பற்றி நான் சந்தோஷப்படுகிறேன். பிளாக்கில் 'முந்தானை முடிச்சு' டிக்கட் நூற்றிருபது ரூபாய் வரை விற்றது என்பதைக் கேட்கும்போது ஒருவித சங்கடத்தால் நெளிகிறேன். முன்பு இப்படித்தான் ஒரு முறை ஒரு பெரிய ஊரில் ஒருவர் என்னைத் தேடிக் கொண்டு ஹோட்டல் அறைக்கு வந்தார். பெரிதாக மாலை போட்டார். ''உங்களாலே நான் இப்போ வசதியாக இருக்கேன். கடன் கிடன் எதுவும் இல்லே... சொந்தத்திலே வீடு வாங்கக் கூட ட்ரை பண்ணிக்கிட்டிருக்கேன்'' என்றார். ''நீங்க யார்னு சொல்லவே இல்லையே?'' என்றேன். அவர் ஒரு தியேட்டரில் என் படத்துக்கு டிக்கெட் வாங்கி 'பிளாக்கி'ல் விற்றே பணக்காரராக ஆனவராம்! எப்படி இருக்கிறது பாருங்கள்! என்னால் சந்தோஷப்படவும் முடியவில்லை; சந்தோஷப்படாமல் இருக்கவும் முடியவில்லை... இன்னொரு தியேட்டரில் என் படம் ஓடிக்கொண்டிருந்தபோது நான் ஒரு நாள் படம் பார்க்கப் போயிருந்தேன். காருக்குள் கையை நீட்டி, என் கையைக் குலுக்கி, ''அண்ணே! உங்களாலே பிழைப்பு நல்லா நடக்குது. இதே போல் படம் எடுங்க!'' என்று கேட்டுக் கொண்டார்கள் சிலர். அவர்களும் பிளாக்கில் டிக்கட் விற்பவர்கள்தாம்!

எனக்குப் பயமாக இருக்கிறது என்று சொன்னேனே, அதற்கு வருகிறேன். என் படமென்றால் 75 அல்லது 100 அடிக்கு ஒரு சிரிப்பு வரவேண்டுமென்று ரசிகர்கள் எதிர்பார்க்கிறார்கள். இதற்காக நான் மண்டையை உடைத்துக் கொள்ள வேண்டி யிருக்கிறது. டயலாக் மூலமோ அல்லது காட்சி யமைப்பு மூலமோ அப்படிச் சிரிப்பு வரவழைக்க என்னால் முடியவில்லை யென்றால், ''பாக்யராஜ் என்ன இப்படி டல் அடிக்கிறாரே!'' என்று சுலபமாகத் தீர்ப்பு எழுதி விடுவார்கள். அந்த நிலைமை நேரக் கூடாது என்பதற்காகத்தான் சிரமப்பட்டுக் கொண்டிருக்கிறேன்.

இன்றைக்குக் கூட காலையிலிருந்து ஒரு கதையைத்தான் என் அஸிஸ்டெண்டுகளுடன் டிஸ்கஸ் செய்து கொண்டிருந்தேன். எனக்குத் திருப்தி கொடுக்கும் விதத்தில் அமையவில்லை. யோசித்து யோசித்து மண்டை காய்ந்து போனதுதான் மிச்சம்... சரி உபயோகமாக ஏதாவது செய்யலாமே என்று தோன்றியது. படுத்துத் தூங்கி விட்டேன்! இப்போதுதான் நீங்கள் வந்திருப்பதாகச் சொல்லி எழுப்பினார்கள்!''

வெள்ளை மனசுடன் யதார்த்தமாகச் சொல்லிச் சிரித்தார் வெற்றிப் பட வித்தகர் கே. பாக்யராஜ்.

பேட்டி: முருந்தன்
வண்ணப்படம்: யோகா

''நம்ம விஜியைப் பெண் பார்க்க வந்தவங்க சரியான அல்பம்!''
''ஏங்க?''
''பெண் பிடிச்சிருக்கான்னு கேட்டேன். 'போய் லெட்டர் போடறேன், கவர் வாங்க ஐம்பது பைசா கொடுங்க'ன்னு கேட்டு வாங்கிட்டுப் போயிட்டாங்க!''

—உ. ராஜாஜி






DIPR 509 83 ELEGANT

○ டி. ஜே. ஜவாஹர், கோவில்பட்டி ★

? நெடுமாறன் தியாகப் பயணம் இராமேஸ்வரத்தில் தடுக்கப்பட்டதா, கைவிடப்பட்டதா?

! தடுக்கப்பட்டது போல் தோன்றக்கூடாது என்பதற்காக எல்லாப் படகுகளும் வேறு துறைகளுக்கு அப்புறப்படுத்தப்பட்ட போதிலும் ஒரே ஒரு படகு விட்டு வைக்கப் பட்டது. கைவிடப்பட்டது போல் தோன்றக் கூடாது என்பதற்காக அந்தப் படகைப் பயன்படுத்த அவர் அனுமதிக்கப்பட்ட போதிலும் அதில் துடுப்பு இல்லாமல் கவனித்துக் கொள்ளப்பட்டது!

○ கோ. பாஸ்கர், இளங்கார்குடி

? ஜெயவர்த்தனேக்கும் உமக்கும் ஏதாவது உடன்பாடா? ஏதோ இருக்கும் சிங்களவர் களிலேயே இவர்தான் மனிதாபிமானம் உள்ள வர் என்பது போல் எழுதுகிறீரே?

! அடடா, தெரியாதா உமக்கு? இந்தக் குழப்பமெல்லாம் ஒய்ந்ததும் ஜெயவர்த் தனே தராசுவை ராஜ மரியாதையுடன் வரவேற்றுப்பொன்னாடை போர்த்திப்பண முடிப்பு அளிக்கப் போகிறார். மனிதாபி மானச் செம்மல் என்று பட்டம் வேறு தயாராக வைத்திருக்கிறார்!

பூர்வமான, அணுகுமுறையை விட்டொழித்து அறிவு பூர்வமாக இரு தரப்பினரும் நடந்து கொண்டால் பிரச்னை இருக்கும் இடம் தெரியாமல் மறைந்து போகாதா? அப்படியானால் எதற்கு இந் தக் கலவரங்கள் என்கிறீரா? அதைத்தான் தலைவிதி, போறாத வேளை, துரதிர்ஷ்டம் என்று பல பெயர்களிட்டு அழைக்கிறோம்.

○ வா. கோ. பார்த்தசாரதி, சீனிவாசநல்லூர்

? கலைத் துறையின் கண்ணியம் காக்க வேண் டாமா? 'பொன் மொழிப் போட்டி போன்றவை அவசியமா?

! ஏன், அதிலென்ன தவறு கண்டுவிட்டீர்? கூப்பன் கட்டணமா வசூலித்துவிட்டோம்? காசு கொடுத்துக் கல்கி வாங்கும் அன்பர் களுக்கு எளிய போட்டி வைப்பதில் என்ன பிசகு? மேலும் கலைத் துறை வளர சிறுகதைப் போட்டி, கவிதைப் போட்டி, நாடகப் போட்டி முதலானவையும் அவ் வப்போது அறிவிக்கிறோமே—அவை உமது கண்ணில் படவில்லையா?

○ ப. மூர்த்தி, பெங்களூர்

? கர்நாடகத்தில் ஊராட்சி, நகராட்சி, நக ரவைத்

# பெண் சிவப்பாயிருந்தால்தான் அழகா?

ஜி. பார்த்தசாரதி



டி.வி. ராமானுஜம்





பிரபு

○ உ. அசோக் பாபு, மணப்பாறை

? ஜெயவர்த்தனேயின் பசப்புமொழி பற்றி என்ன நினைக்கிறீர்?

! நீர் தேவலாம், பசப்பு மொழி என்கிறீர். பலருக்குக் கசப்பு மொழியாக அல்லவா தொனிக்கிறது!

○ சுஜாதா பிரியன், பிளிச்சி

? இலங்கைப் பிரச்னை தீர என்ன வழி?

! ரொம்பச் சுலபமான வழி இருக்கிறது. காது கொடுத்துக் கேளுங்கள்! இலங்கைத் தமிழரும் சிங்களவரும் தாங்கள் பரஸ்பரம் ஒருவரை ஒருவர் சார்ந்துதான் வாழ வேண்டும் என்பதைப் புரிந்து கொண்டு விட்டால் போதும்! இலங்கைப் பொருளா தாரத்தின் முன்னேற்றத்துக்குத் தமிழர் பணி எவ்வளவு மகத்தானது என்பதைச் சிங்களவர் உணர்ந்து தமிழரைச் சம அந் தஸ்துடன் சகோதரராய் நடத்த வேண் டும். சுதந்திர ஈழத் தமிழ்நாடு அமை வதற்கு முன்பும் அமைந்த பின்னும் தோன் றக்கூடிய புதிய புதிய பிரச்னைகள் பற்றி ஈழத் தமிழர் சிந்தித்து அந்தக் கோரிக் கையைக் கைவிட வேண்டும். உணர்ச்சி

தேர்தலை அறிவித்து வெற்றியும் பெற்றுவிட்ட எங்கள் முதல்வர் ஹெக்டே பற்றி உங்கள் கருத்து என்ன?

! இதோ, அதோ என்று ஜாலக்குப் பண் ணியேகாலத்தை ஓட்டிவிடும் எங்கள் முதல் வரின் சாமர்த்தியம் அவருக்கு வராது என்பதுதான்!

○ ஜெ. ராஜ்குமார், சங்கராபுரம்

? பெண் சிவப்பாக இருந்தால்தான் அழகு என் கிறார்களே, இவர்கள் எதில் சேர்த்தி?

! 'சூட்டிலும் ஒரு ருசி, கறுப்பிலும் ஓர் அழகு' என்பதை அறியாதவர்களுடன் சேர்த்தி.

○ க. மந்திரமூர்த்தி, மதுரை

? மதுரை ஆர். வி. பட்டியில் ஒரு பெண் தனது கணவன் இன்னொரு பெண்ணை மணந்து கொள்ளப் போகிறான் என்பதைக் கேள்விப் பட்டதும் தன்னையும் கணவனையும் குழந்தை களையும் தீவைத்து மாய்த்துக் கொண்டது பற்றி?

! இப்படிச் சில பெண்கள் எனில் இதற்கு மறுபுறத்தைப் பாருங்கள்: சென்னை சுயம் வரம் ஒன்றில், நோயுற்றிருக்கும் ஒரு மனைவி

தன் கணவனுக்கு இரண்டாவது மனைவியைத் தேர்ந்தெடுத்துத் தரக் கணவனை அழைத்துக் கொண்டு தானே வந்தாள். தன் மூன்று வயதுக் குழந்தையைக் கவனித்துக் கொள்ளவேனும் ஒரு நல்ல மனைவி தன் கணவனுக்குக் கிடைக்க வேண்டும் என்று தான் பாடுபடுவதாகக் கூறினாள்!

○ வி. சந்திரசேகரன், வீரராகியம்

? அமைதிக்கான நோபெல் பரிசு இந்தியப் பிரதமருக்குக் கிடைக்கவிருக்கிறது; இலங்கையுடன் போர் மூண்டால் அது கிடைக்காமல் போய்விடும்; பரிசை இழக்க மனமின்றித்தான் பிரதமர் படை அனுப்ப மறுக்கிறார் என்று பேசப்படுகிறதே?

! இது இரட்டைப் புரளி. அமைதிக்கான நோபெல் பரிசு பெறப் பிரதமருக்கு வாய்ப்பிருக்கிறதா என்பதே சந்தேகம். மேலும் இந்தப் புரளியைக் கிளப்பி விடுகிறவர்கள் அமைதி காக்க வேண்டும் என்பதற்காகத் தானே ஈழத்துக்குப் படை அனுப்பச் சொல்கிறார்கள்? ஆக, படை அனுப்பினால் அமைதி நிலவாது என்பதை அவர்களே ஒப்புக்கொள்வதாகவும் ஆகிறதே!

# நீங்கள் கேட்டவை தராசு

○ வி. ஜி. நேசன், சென்னை

? ஜி. பார்த்தசாரதி எப்படிச் செயல்படுவார்?

! ஆழ்ந்த ஞானமும், பழுத்த அனுபவமும் மிக்க அதிகார வர்க்க ராஜதந்திரி. திறந்த மனத்துடன் பிரச்னையை அணுகுவார் என்பது அவர் இங்கிருந்து புறப்படு முன்னர் தமிழகத் தலைவர்களையும் கலந்தாலோசிப்பதிலிருந்தே தெரிகிறது. பேச்சு வார்த்தைகளைத் தொடங்கி வைப்பதும் அதற்கேற்றமனப் பக்குவத்தைச் சம்பந்தப்பட்டவர்களிடம் உருவாக்குவதும்தான் இந்தியாவின் முக்கிய பணி. இந்தியா நேரடியாகப் பேச்சு வார்த்தைகளில் கலந்து கொள்ள முடியாமல் போகும் என்றாலும் நல்ல முடிவுக்கு வர இரு தரப்பினரையும் ஊக்குவிப்பது சாத்தியமே. ஜி.பி. வெற்றி பெற வாழ்த்துவோம்.

○ வி. நடராஜன், திருச்சி

? தியாகப் பயணம் பப்ளிசிடிக்காக என்று எங்கள் தலைவர் நெடுமாறன் பற்றி நீங்கள் எழுதியது மிகவும் வருத்தமளிக்கிறது. இப்படி எழுதலாமா?

! எனது மதிப்புக்கும் மரியாதைக்கும் உரிய நெடுமாறன் பற்றி இப்படி எழுத நேர்ந்தது எனக்கு எவ்வளவு வருத்தமளித்திருக்கும் என்று நீர் சற்று எண்ணிப் பார்க்க வேண்டாமா? நெடுமாறன் மட்டுமல்ல, எந்தத் தலைவருமே எனது கண்டன விமர்சனத்துக்கு உள்ளாகும்போது 'அடடா இப்படி எழுத நேர்கிறதே' என்று நான் வருந்தவே செய்கிறேன்.

○ மனோபாரதி, பாண்டிச்சேரி

? அண்மையில் தாங்கள் மெய்சிலிர்த்த நேரம்?

! ''ராமகிருஷ்ண மடம் நடத்தி வரும் ஹரிஜனப் பணியை யொட்டி ஒரு மருத்துவ கேந்திரம், நர்ஸரி பள்ளி முதலானவற்றுக்கு மூன்று லட்சம் நிதி திரட்டி அளிக்க ஒப்புக்கொண்டேன்; இரண்டு மாதங்களில் 25,000 சேர்த்தேன்; அதற்குள் எனக்குப் புற்று நோய் வந்து படுக்கையில் தள்ளிவிட்டது; சாகுமுன்னர் நான் மேற்கொண்ட பணியை முடித்துவிட விரும்புகிறேன்; அன்பர்களின் உதவியை நாடுகிறேன்'' என்று கே. சுப்பிரமணியம் என்பவர் ஹிந்து பத்திரிகையில் கொடுத்திருக்கும் விளம்பரத்தைப் பார்த்த போது, மெய்யாலுமே மெய் சிலிர்த்தது.

○ வனிதா, சிதம்பரம்

? பிரபுவை 'குட்டி சூப்பர் ஸ்டார்' என்கிறார்களே?

நடிப்பு வருகிறது. அந்தக் குழிவிழும் கன்னம் ஒரு பிளஸ்பாயிண்ட். எம். ஜி. ஆர். ரசிகன் என்று கூறும் ராஜதந்திரம், தயாரிப்பாளருக்கும் லாபம் வந்து விடுகிறது. மொத்தத்தில் அப்பா பெயரைக் காப்பாற்றி விடுவார். ஆனாலும் ஒரு 'சகாப்தம்' என்று வர்ணிக்கும் அளவுக்குத் தாக்குப் பிடிப்பாரா என்பது கேள்விக் குறிதான்.

○ குமரேசன், பம்பாய்

? இந்நகரின் முன்னாள் ஷெரீப்பாக விளங்கிய டி. வி. ராமானுஜத்திற்கு விகவ ஸன்ஸ்க்ருதி உன்னாயன் ரத்ன என்ற பட்டம் வழங்கப்பட்டிருக்கிறதே. கேள்விப்பட்டீரா?

! படாமலென்ன. பரதம் முதலிய சாஸ்திரீய நடனங்கள், கர்நாடக இசை, ஹரிகதை ஆகியவற்றின் வளர்ச்சிக்காக வாழ்க்கையின் பெரும் பகுதியை அர்ப்பணித்து, 5500 அங்கத்தினர்களைக் கொண்ட ஷண்முகானந்த சபாவை நிறுவி, அதற்கென ஓர் அரங்கத்தையும் அமைத்து, பத்மஸ்ரீயும் பெற்றுள்ள அவருக்கு ''பண்பாட்டுக் காவலர்'' என்ற பொருள்படும் இந்த டாக்டர் பட்டம் மிகவும் பொருத்தமானதே.

ரூ. 10 பரிசு பெறுபவர்:

★ டி. ஜே. ஜவாஹர்,
79-ஏ, வக்கீல் தெரு,
எம். ஆர். எஸ். காம்பவுண்டு,
கோவில்பட்டி-627 701

# நூல் நூலாக





புத்தகம் (அல்லது நூல்) வெளியிடுவதென்பது எல்லோராலும் எளிதாகச் செய்யக்கூடிய ஒரு தொழில் அல்ல. பண பலம் ஒன்றை மட்டும் வைத்துக் கொண்டு தொழிலறிவு இல்லாமலே கூட மற்ற சில தொழில்களைச் சிறப்பாக நடத்திவிட முடியும். ஆனால் நூல் வெளியிடும் துறை அப்படிப்பட்டதல்ல. அதற்கு நிறைய அனுபவமும், புத்திசாலித்தனமும் தேவை.

எந்த எழுத்தாளரின் எப்படிப்பட்ட எழுத்துக்களுக்கு ஜனங்கள் மத்தியில் வரவேற்பு இருக்கிறது என்று தெரிந்து கொள்வது புத்தகப் பதிப்பாளரின் பால பாடம் என்றால், நூலகக் குழுவுக்கு நூல்களை சப்ளை செய்துவிட்டு, எப்படி 'பில்' போட்டு, எங்கே எவ்வளவு தள்ளிப் பணம் பெறுவதென்பது முதுகலைப் படிப்பு!

அத்தனையிலும் கைதேர்ந்த பதிப்பாளர்கள் பலர் நம்மிடையே இருக்கத்தான் செய்கிறார்கள் என்பது மகிழ்ச்சிக்குரிய விஷயம்.

அந்தக் காலத்துப் பதிப்பாளர்களுக்கும் (அதாவது சக்தி காரியாலயம், நவயுகப் பிரசுராலயம் போன்ற முன்னோடிகள்) தற்காலத்திய நூல் வெளியீட்டாளர்களுக்கும் ஒரே ஒரு முக்கியமான வித்தியாசம்தான் பளிச்சென்று நமக்குத் தெரிகிறது. முன்னோடிகள் தரம்வாய்ந்த, பரவலாகப் பயன்படக்கூடிய, நினைவில் நீண்ட நாள் நிலைத்து நிற்கக் கூடிய எழுத்துக்களாகத் தேடிப் பிடித்துப் பிரசுரம் செய்தார்கள். இப்போதோ எல்லாவிதமான எழுத்துக்களுமே நூல் வடிவம் அடைந்து கௌரவம் பெற்றுவிடுகின்றன. பதிப்பாளர்களை மட்டும் இந்த விஷயத்தில் குற்றம் சாட்டிப் பயனில்லை என்பதையும் ஒப்புக்கொள்ள வேண்டும்.

'இப்போது தரமான எழுத்துக்களே வருவதில்லையா என்ன?' என்று பதிப்பாளர்கள் யாரும் சண்டைக்கு வரவேண்டாம். தரமும் இருக்கிறது. தரக் குறைவும் இருக்கிறது. இரண்டின் விகிதாச்சாரத்தைப் பற்றித்தான் கவலையாக இருக்கிறது!

ஒரு குறிப்பிட்ட துறையைச் சார்ந்த நூல்களை மட்டுமே வெளியிடுவது என்று மேல் நாட்டுப் பதிப்பாளர்கள் சிலர் ஒரு கோட்பாடு வைத்துக் கொண்டு செயல்பட்டு வருகிறார்கள். நம் நாட்டில் - அதுவும் குறிப்பாகத் தமிழ்நாட்டில் - எந்தப் பதிப்பாளரும் இப்படிச் செய்வதாகத் தெரியவில்லை. இங்கே ஒரே பதிப்பாளர் இலக்கணம், குழந்தை இலக்கியம், மருத்துவம், ஜோதிடம், சிறுகதைகள், அரசியல், பொது அறிவு, அறிவியல், புதுக் கவிதை, சமையல், புவியியல், - என்று எல்லா வகையான நூல்களையும் அவியலாக அச்சேற்றிக் குவிக்கிறார்கள். கதை, கட்டுரைகள் எப்படியோ போகட்டும்; மற்ற துறைப் புத்தகங்களைப் பொறுத்த மட்டிலும் குறிப்பிட்ட விஷயத்தைப் பற்றி எழுதுகிறவருக்கு அதற்குரிய தகுதி இருக்கிறதா என்று யாருமே கவனிப்பதாகத் தெரியவில்லை. இதிலே 'ஊருக்கு இளைத்தவன் பிள்ளையார் கோவில் ஆண்டி' என்பது போல, மருத்துவம் சம்பந்தமான நூல்களைத்தான் யார் வேண்டுமானாலும் எழுதலாம் என்றாகி விட்டது. இலக்கணப் பிழையின்றி உங்களுக்கு எழுத வருமா? ஆங்கிலத்தில் வெளியாகும் மருத்துவக் கட்டுரைகளை ஓரளவுக்குச் சரளமாகப் பெயர்த்தெழுத முடியுமா? அப்படியானால் 'சொறி சிரங்கைப் போக்குவது எப்படி?' என்பது முதல் 'கான்ஸரா? பயப்படாதீர்கள்!' என்பது வரை நீங்கள் மருத்துவ நூல்களாக எழுதிக் குவிக்கலாம். உங்களைத் தட்டிக் கேட்க ஆள் இடையாது! எனக்குத் தெரிந்த ஒரு நண்பர் ஒரே ஒரு முறை ஒரு பிரபல டாக்டரிடம் சென்று முக்கால் மணி நேரம் பேசிவிட்டு வந்து, ஒரு புத்தகமே எழுதி வெளியிட்டிருக்கிறார் என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்!

நூல் வெளியிடுவது பற்றி நிறைய எழுதலாம்; எழுதுவதற்கு விஷயமும் இருக்கிறது. பின்னர் பார்த்துக் கொள்வோம்.

முடிவாக ஒரு வார்த்தை: நூல் வெளியீட்டுத் துறையில் அன்றும் இன்றும் கோலோச்சி வருபவர்கள் நகரத்தார் சமூகத்தினரே. தொண்டு மனப்பான்மையோ வியாபாரமோ - எது காரணமாக இருந்தாலும் சளைக்காமல் இத்துறையில் பாடுபட்டு வரும் அவர்களுக்குத் தமிழ் வாசகர்கள் பெரிதும் கடமைப்பட்டிருக்கிறார்கள்.

**-எஸ்.வி.ஆர்.**

வண்ணப்படம்: க. சாமிநாதன்
[illegible]: விஜயா பதிப்பகம், கோவை
[illegible]: [illegible]

Printed by V. Murali and Published by V. Vaidyapathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd. at the Bharathan Press, Race Course Road Guindy, Madras-600032. (Phone: 431543)

Assistant Editor: P. S. Mani Editor: K. Rajendran

